# தெய்வீக வாழ்க்கை

## நாடகம்

## (DIVINE LIFE- DRAMA)





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# தெய்வீக வாழ்க்கை

(நாடகம்)

அருளியது

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்

**"ச்ரத்தா ரத்னம், கர்ம யோகிவீர்"**

**திரு. மு. ஸ்ரீனிவாசன்**






வெளியிடுவோர்

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,**

சிவானந்தா ஆஸ்ரமம்,

சுவாமி சிவானந்தா சாலை,

இராசிபுரம் : இராஜாஜி மாவட்டம்

விலை] **1997** [ரூ. **10.00**

தமிழ் வெளியீடு- 99



Translated into Tamil

**"DIVINE LIFE" Drama**

Print out of the magnanimous donation of :-

Rs. 1,000/-

**SRI. M. SRINIVASAN**

CHENNAI - 20

**TYPESET BY:** PRINT SHOP, MADURAI, Ph : 743981
**PRINTED AT :** THE ORIENT LITHO PRESS, SIVAKASI.

## முகவுரை

ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்களின் ஆங்கில நாடகமான Divine Lifeன் தமிழ் மொழி பெயர்ப்பே "தெய்வீக வாழ்க்கை" என்னும் இந்நூல். ஸ்வாமி சிவானந்தரைப் பற்றியோ, அவரது பெருமையைப் பற்றியோ இங்கு அதிகம் பகர அவசியமில்லை. ஏனெனில் அவை அனைத்தும் உலகமறிந்த உண்மைகளாம்.

வீட்டில் அன்னையானவள் தனது ஒவ்வொரு குழந்தையின் ருசிக்கும், ஜீரணசக்திக்கும் தகுந்தவாறு ஒரே தான்யத்தினின்றும் பலவுகையான தின்பண்டங்களையும், உணவு வகைகளையும் தயாரித்து அளிப்பதுபோல் ஆத்மீக ஞானப்பசி கொண்ட சாதகர்களாகிய குழந்தைகளுக்கு அன்னைபோன்று பரிவுடன் சாதகர்களின் ருசிக்கும், மனப்பக்குவத்திற்கும் தகுந்தவாறு அரிய, பெரிய ஆத்மீக உண்மைகளை சொற்பொழிவுகள் மூலமாகவும், நீண்ட கட்டுரைகள் மூலமாகவும், நாடக ரூபமாகவும், உபதேசமொழி ரூபமாகவும் விளங்க வைப்பதே ஸ்வாமிகளின் பெருமையாகும். ஆஸ்தீகர்களும், சாதகர்களும் இந்நூலை படித்து பயன் பெறுமாறு கோரப்படுகிறார்கள். ஸ்ரீ மு. சீனிவாசன் அவர்கள் மொழி பெயர்ப்பை அழகாகச் செய்துள்ளார்கள். இறைவனருளும், சத்குருவின் அருளும் அவருக்கு பூரணமாகக் கிட்டுவதாகுக.

பதிப்பாளர்

# கதைச் சுருக்கம்

புண்ணியச் செயல்களின் மூலம் தனக்குப் புத்திரப் பேறு உண்டாகும் என்ற எண்ணத்தினால் ஹரித்துவாரில் நடக்கும் கும்பமேளா விழாவுக்குத் தன்னை அழைத்துச் செல்லுமாறு மோஹினி தன் கணவனைத் தூண்டுகிறாள். சிறிது நேர விவாதத்திற்குப் பின் இருவரும் போவதாக முடிவு செய்கிறார்கள்.

புண்ணிய ஸ்தலங்களைத் தரிசிப்பதின் மூலம் மனிதனின் ஸத்வ குணங்கள் அதிகரிக்கும் என்ற நம்பிக்கையால் பக்தி மிக்க ஹரிதாஸி, மஞ்ஜீத் சிங் என்ற மற்றொரு தம்பதிகளும் ஹரித்துவாருக்குக் கிளம்புகிறார்கள்.

புண்ணிய தீர்த்தங்களில் நம்பிக்கையற்ற மாயாவதி, சுந்தர் தாஸ் தம்பதிகளும் வேடிக்கையாகத் தங்கள் விடுமுறையைக் கழிக்க எண்ணி அங்கு கிளம்புகிறார்கள்.

ஒரு அபேத வாதி, ஒரு சமூகத் தொண்டன், ஒரு கர்ம யோகி, ஒரு சுக போகி ஆகியோரும் அதே ரயிலில் ஹரித்துவாருக்குப் போகிறார்கள்.

ரயில் வண்டியில் ஒருவருக்கொருவர் அறிமுகமாகி, பேச்சு வாக்கில் புண்ணிய ஸ்தலங்களைத் தரிசிப்பதால் உண்டாகும் பலாபலன்களைக் குறித்து விவாதம் ஏற்படுகிறது. கடைசியில் தெய்வம், மதம் இரண்டும் இல்லை என்ற முடிவுக்கு வருகிறார்கள்.

ஹரித்துவாரத்தில் அனைவரும் ஒரே இடத்தில் தங்குகிறார்கள். ஒரு சமயம் சன்சாரி நாத்தும், அவருடைய மனைவியும் ஞானானந்தன், யோகானந்தன் என்ற இரு பிரம்மச்சாரிகளுக்குப் பிக்ஷை இடும் போது மற்றவர்கள் குறுக்கிட்டு மகாத்மாக்களுக்குப் பிக்ஷை இடுவது கூடாதென்று

சொல்லி, சாதுக்களைத் தூற்றுகிறார்கள். அந்த பிரமச்சாரிகளுக்கும், 'நாஸ்திகர்களுக்குமிடையே ஒரு விவாதம் ஏற்படுகிறது. அதன் பயனாக சன்சாரி நாத், மோஹினி இருவருடைய நம்பிக்கைகளும் தளர்ந்து விடுகின்றன. மற்றவர்கள் அகன்றதும் பிரம்மச்சாரிகளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறார்கள். அவர்கள் அத்தம்பதிகளைத் தங்கள் குருமகராஜிடம் அழைத்துச் செல்லுகிறார்கள். சத் குருவின் பத்ம பாதங்களில் அமர்ந்து, அவருடைய உபதேசங்களைக் கேட்டுத் தங்கள் சந்தேகம் தீர்ந்தவர்களாகிறார்கள் இருவரும்.

ஹரித்துவாரில் ஆத்மீக மகாநாட்டின் சார்பில் பண்டிட் சந்திர சேகர்ஜி 'ஹிந்துஸ்தானத்தின் பெருமை' என்பது பற்றி ஒரு உருக்கமான சொற்பொழிவாற்றுகிறார். சுந்தர் தாஸ், மாயாவதி, பெட்டூலால், தேச ராஜ் முதலியோர் கூட்டத்திற்குச் சென்று சாஸ்திரியின் மதிப்பைக் குறைக்க எண்ணி அவருடைய பேச்சில் குறுக்கிடுகிறார்கள். அதன் பயனாக ஒரு சண்டை மூள, சுந்தர் தாஸ் முதலியோர் காயப் படுத்தப்படுகிறார்கள். அச்சமயம் தற்செயலாக அங்கு வந்த ஞானானந்தன், ஸேவாராம் இருவரும் அவர்களைக் கவனித்து வேண்டியன செய்கிறார்கள். பின்னர் ஞானானந்தன் அவர்களுடைய தவறான கொள்கையை எடுத்துக் காட்டி, அவர்களை சுவாமிஜிடம் அழைத்துச் செல்லுகிறான்.

சத் குரு எல்லா யோகங்களின் அவசியத்தையும் எடுத்துக் காட்டி, மனிதனின் லட்சியத்தை எடுத்துணர்த்தி, மோக்ஷத்தை அடைய நம் முன்னோர் காட்டியுள்ள வழியையும் விளக்கிக் கூறி ஒரு அழகிய பிரசங்கம் செய்கிறார்.

அனைவருடைய சந்தேகமும் தீர்ந்து, சமாதானம் நிலவுகிறது. சுவாமிஜி ஒரு கீர்த்தனம் பாடுகிறார்.

## பிரார்த்தனை

அதனை வணக்கத்தாலும், ஸாஸ்த்திரக் கேள்வியாலும், தொண்டு புரிவதாலும் அறிந்து கொள். உண்மை காணும் ஞானிகள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள்.

கர்மத்தால் பெற்ற இவ்வுலகை நன்காராய்ந்து விட்டு ஒரு சாதகன் அக் கர்மத்தால் நித்யமானதொன்றையும் பெறமுடியாதென்று அறிந்து, எல்லா விருப்பங்களினின்றும் விடுதலை பெறட்டும். அச் சாசுவதமான் மெய்யறிவை பெறட்டும். அச் சாசுவதமான மெய்யறிவை அறியும் பொருட்டு தன் கைகளில் வேள்வித் தீயுடன் வேதங்களை நன்கறிந்து, பிரமத்தில் நிலைத்திருக்கும் ஒரு ஆச்சாரியனை அடையட்டும்.

கருணைக் கடலும், எல்லாருடைய நலனுக்காக உழைப்பவரும், எப்போதும் சச்சிதானந்தத்தில் திளைப்பவரும், எப்போதும் உண்மையையே நாடுபவரும், ஆனந்த சுவரூபியுமான சிவானந்த யோகீந்திரருக்கு வணக்கம்.

# நாடக பாத்திரங்கள்

பெண்கள்

மோஹினி :- சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள அனுஷ்டானங்களில் நம்பிக்கை உள்ளவளும், புத்திரப் பேறுக்காக ஏங்குபவளும், அதிகம் கற்காதவளுமான சன்சாரி நாதனின் மனைவி.

மாயாவதி :- சுந்தர தாஸின் மனைவி உலகாயத மனப் பான்மை கொண்டவள். சிற்றின்பத்தில் ஆவல் கொண்டவள்.

ஹரிதாஸி :- பக்தி சிரத்தையுள்ளவள் - மஞ்ஜீத் சிங்கின் மனைவி.

ஆண்கள் :

சன்சாரி நாத் :- உறுதியான கொள்கைகளற்றவன். சூழ்ந்த குடும்பப் பற்று சாதாரணப் படிப்பு - சம்பாத்தியம் உடையவன்.

சுந்தர் தாஸ் :- ஒரு நாஸ்திகன்

தேச ராஜ் :- ஹிந்துஸ்தான் சேவா தளத்தைச் சார்ந்த ஒரு தொண்டன் அபேதவாதி.

பெட்டூலால் : வாழ்க்கை உண்டு, உடுத்து இன்பமாக கழிப்பதற்கே என்ற கொள்கையுடைய ஒரு வாலிபன்.

மஞ்ஜீத் சிங் :- ராஜ யோகம் பயில்வோன்.

சேவாராம் :- மஞ்ஜீத் சிங்கின் உறவின்ன்-ஒரு கர்மயோகி.

யோகானந்தன்- ஒரு ஹடயோகி

ஞானானந்தன் - ஒரு வேதாந்தி

ஆத்மானந்தன் - மற்றொரு சீடன்

சுவாமிஜி - ஒரு ஸத் குரு. பரம்பொருளைக் கண்ட ஒரு மகான் - பிரம்ம நிர்வாணம் எய்தியவர்

மஹாமஹோபாத்யாய

பண்டிட் சந்திரசேகர்ஜி

ஹிந்து சநாதன தர்மத்தைப் பற்றி பேசுபவர்; அவரைப் பின்பற்றுவோர்.

## காட்சி 1

## (பிரார்த்தனை)

ராம ஹரே சியா ராம ராம்
ராம ஹரே சியா ராம ராம்
ராம ஹரே சியா ராம ராம்
ராம ஹரே சியா ராம ராம்

கிருஷ்ண ஹரே ராதே சியாம சியாம்
கிருஷ்ண ஹரே ராதே சியாம சியாம்
கிருஷ்ண ஹரே ராதே சியாம சியாம்
கிருஷ்ண ஹரே ராதே சியாம சியாம்

ஸ்ரீ கோகுல்கே ரஹனே வாலா
ஜெய ஜெய ஜெய நந்தலாலா,
மக்கன் மிச்ரி கானே வாலா,
மோஹன் முரளீ பன்ஸிவாலா.

## காட்சி 2

*(சன்சாரி நாத், அவனுடைய மனைவி மோஹினி இருவரும், பேச்சைத் துவக்குகிறார்கள்)*

**மோஹினி :** சுவாமி இந்த மாதம் நடைபெறப் போகும் கும்ப மேளா விழாவுக்காக ஹரித்துவாருக்கு ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் போவார்களாமே. இந்த மாதிரியான புனித நாளில் புண்ணிய கங்கையில் மூழ்கினால் பண்ணின பாபம் தீருமென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். எனவே நாமும் அங்கு போக வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

**சன்சாரி:** ஹரித்துவாரம் நல்ல இடம் தான், சந்தேகமில்லை. கும்ப மேளா விழாவும் பன்னிரெண்டு வருஷங்களுக்கு ஒரு முறை தான் நடைபெறும். ஆனால் இந்த விழாக் காலத்தில் அங்கு லட்சக் கணக்கில் ஜனங்கள் கூடுவார்கள். அதனால் காலரா போன்ற தொத்து வியாதிகள் உண்டாகின்றன. மேலும் இருக்க இடமும், உண்ண உணவும் எளிதில் கிடைக்காது, பிரயாணமும் சிரமமானதே. எனவே கூட்டமில்லாத மற்றொரு சமயம் போகலாம் என்று நினைக்கிறேன்.

**மோஹினி :** இந்த விழாச் சமயத்தில் அங்கு பல மகாத்மாக்கள் கூடுவார்களென்றும், அவர்களைத் தரிசித்தால் மிகவும் நல்லதென்றும் என் தோழி ஹரி தாஸி கூறினாள். அவளும், அவளுடைய கணவனும் அங்கு போகப் போகிறார்களாம். நமக்கும் நல்ல துணை. மேலும் (நாணத்துடன்) இந்தப் புண்ணிய காரியங்களால் நம்முடைய குறையும் தீரலாம்.

**சன்சாரி :** எனக்கும் மஞ்ஜீத் சிங்கை நன்றாகத் தெரியும். அவர் போவதாயிருந்தால் நாமும் போகலாம்.

*(மஞ்ஜீத் சிங்கும், ஹரி தாஸியும் வருகிறார்கள்)*

**மஞ்ஜீத் சிங் :** நண்பரே நமஸ்காரம். நீங்களும் உங்கள் மனைவியாரும் ஹரித்துவாரத்திற்குப் போக நிச்சயித்திருப்பதாக என் மனைவி சொன்னாள். நாங்களும் போகலாமென்று நினைக்கிறோம். எனவே நீங்களும் வருவதாயிருந்தால் நல்ல துணை.

**சன்சாரி :** நமஸ்காரம், சிங்ஜீ. நாங்களும் உங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தோம். (இரு நாற்காலிகளை இழுத்துப் போட்டு) ஏன் நிற்கிறீர்கள், உட்கார்ந்து கொள்ளுங்கள்.... எனக்கு உண்மையில் இந்த மாதிரிக் கூட்டங்களுக்குப் போவதில் இஷ்டமில்லை யெனினும், மோஹினி ஆசைப்படுகிறாள். உங்கள் துணையும் சேர்ந்துவிட்டது. எனவே போக நிச்சயித்து விட்டேன்.

**ஹரிதாஸி** (மோஹினியிடம்) சகோதரி – எப்படியோ உன் கணவரையும் மேளா உத்ஸவத்திற்குக் கிளம்பத் தூண்டி விட்டாய், சந்தோஷம்.

**மோஹினி :** நீங்கள் இருவரும் போகப் போகிறீர்கள் என்று கேட்டது முதல் நானும் அவரைப் புறப்படும்படி தூண்டிக் கொண்டேயிருந்தேன். நீங்களும் வந்து சேர்ந்தீர்கள்.

**மஞ்ஜீத் சிங் :** (சன்சாரி நாதனிடம்) சரி, நண்பரே நாங்கள் போய் வருகிறோம். இனி நாளை மாலை 6 மணிக்குப் புகை வண்டி நிலையத்தில் சந்திப்போம். இன்னொரு விஷயம், என் கூட என் உறவினன் ஒருவனும் வருகிறான்.

**சன்சாரி :** ரொம்ப சந்தோஷம், அங்கு அநேக மகாத்மாக்களைத் தரிசிக்கலாம் என்று நினைக்கிறேன்.

## காட்சி 3

*(ரயில் வண்டியில் ஒரு அறை)*

(சன்சாரி நாத், மோஹினி, மஞ்ஜீத் சிங், ஹரி தாஸி நால்வரும் ஒரு பெஞ்சில் அமர்ந்திருக்கிறார்கள். ஹரி தாஸியும், மஞ்ஜீத் சிங்கும் ஒரு சங்கீர்த்தனத்தை ஆரம்பிக்க, மற்றவர் இருவரும் கூடப் பாடுகிறார்கள்).

*ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே*
*ஹே நாதா நாராயண வாசுதேவா.*

(சுந்தர் தாஸ், மாயாவதி என்ற மற்றொரு தம்பதிகள் பெஞ்சில் அமர்ந்துள்ளனர். இருவரும் கீர்த்தனம் பாடுவோரைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்கிறார்கள்.

**சுந்தர் தாஸ் :** ஹ! ஹ! ஹ! ஐயோ பாவம்! இப்படித் தொண்டை கிழியக் கத்துவதின் மூலம் மோக்ஷம் தங்களுக்குத் தான் என்று இந்த ஜனங்கள் நினைத்துக் கொண்டிருக் கிறார்கள். சன்சாரி நாதனிடம் திரும்பி) சுவாமி! எதற்காக எங்களை இப்படி தொந்தரவு செய்கிறீர்கள்? உங்கள் கீர்த்தனங்களின் சத்தம் எங்கள் காதுகளை அடைக்கிறதே!

**சன்சாரி :** நண்பரே, இதற்காக நான் பெரிதும் வருத்தப்படுகிறேன். எங்களுடைய கீர்த்தனையினாலா உங்களுக்குத் தொந்தரவு ஏற்பட்டுவிட்டது. நான் கேள்விப்பட்ட தென்னவெனில், கீர்த்தனம் எத்தனையோ வியாதிகளைக் குணப்படுத்துமாம். அதுவும், முக்கியமாக இந்த மாதிரி புண்ணிய ஸ்தலங்களுக்குப் போகுங்கால், கட்டாயமாக ஒவ்வொருவரும் பரமனின் பெயர் பாட வேண்டும்.

**மாயாவதி :** ஆனால் நண்பரே, அந்தப் பரமன் என்று சொல்லப்படுபவர் உண்மையிலேயே இருக்கிறாரா? ஏதோ அறியாப் பாமர மக்களிடம் உள்ள ஓரிரண்டு காசுகளையும்

தட்டிப் பறிக்க வேண்டி குருக்கள் செய்த சூழ்ச்சியல்லவோ; இந்தக் கடவுள் என்பதெல்லாம். நான் இந்த மடத் தனத்தையெல்லாம் ஒப்புக் கொள்வதில்லை.

**ஹரிதாஸி :** சகோதரி, உன் வாயிலிருந்து இப்படிப்பட்ட அபசார வார்த்தைகளைக் கேட்க நான் பெரிதும் வருத்தமடைகிறேன். நமது புகழ் பெற்ற பாரத தேசத்தில் பெண்மணிகள் தான் ஹிந்து மதத்தின் தூண்கள். அப்படிப்பட்ட நாமே தெய்வமில்லை யென்று சொல்லிவிட்டால், நமது குழந்தைகள் வருங்காலத்தில் உலகாயத மனப் பான்மை கொண்டவர்களாகி நமது தேசத்தைப் பாழாக்கி விடுவார்கள்.

**மாயாவதி .:** சாஸ்திரங்களில் சிரத்தை காட்டும் கல்வியறிவற்ற பழங்காலப் பெண்கள் தான் இப்படிப்பட்ட நயவஞ்சக வலையில் வீழ்வார்கள். ஆனால் என்னைப் போல் படித்து அறிவு பெற்ற எந்தப் பெண்ணும் தன் கண்ணால் காணாததை நம்பத் தயாராக இல்லை.

**மோஹினி :** நம் மீது ஒரு பிரம்படி விழுந்தால் அதை நாம் எடுத்துரைக்க முடியுமா? ஒரு தித்திப்புப் பண்டத்தின் ருசியையோ, மல்லிகையின் வாசனையையோ, ஒரு ஊசியின் குத்தையோ, நீரின் நிறத்தையோ உன்னால் வர்ணிக்க முடியுமா? நீ உன் இந்திரியங்களின் மூலம் உணருவதையே உன்னால் விளக்க முடியவில்லை. உன் மனம், அறிவு இவற்றின் நுட்பமான வேலைகளை எப்படி எடுத்துரைப்பாய்? இவைகளும் உண்மையில் நீ உணருவது தானே? உன் கணவன், மகன், சகோதரன், தந்தை ஒவ்வொருவரிடமும் நீ கொண்டுள்ள அன்பு வேறுபட்டதாயிருக்கிறது. அதை உன்னால் விளக்க முடியுமா? முடியாது. அதே போல் தெய்வத்தின் திருநாம சங்கீர்த்தனத்தால் உண்டாகும் பேரின்பமானது சொல்லுக்குப் புறம்பானது.

தேச ராஜ் : சகோதர சகோதரிகளே, நான் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் கடவுள், மதம் என்பதெல்லாம் வாழ்க்கைக்கு அவசியமற்றவை என்று கருதுகிறேன். சோம்பேறி வாழ்க்கை நடத்துவோரின் வேண்டாத மனப் பிராந்திகளே இவை. இன்றைய மனிதனுக்கு எவ்வளவோ முக்கியமான விஷயங்களிருப்பதால், இப்படிப்பட்ட பிரயோஜனமற்ற விஷயங்களில் காலத்தை வீணாக்க முடியாதவனாக இருக்கிறான். இன்று நம் தேசத்தின் முக்கியமான பிரச்சனைகள் நமக்கு தேவையான பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவது எப்படி, நம் ஜனங்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துவது எப்படி, அவர்களுடைய நியாயமான உரிமைகளை அடைவது எப்படி என்பனவேயாகும்.

மஞ்ஜீத் சிங் : இவைகளை அடைய அடைய உன்னுடைய கஷ்டங்களும் அதிகமாகும். வாழ்க்கையின் லட்சியம் தான் என்ன? அதிகமாகக் கஷ்டப்படாமல், மேலான சந்தோஷத்தை அடையவேண்டும் என்பது தானே. ஆனால் உண்மையில் இந்த முயற்சிகளெல்லாம் படு தோல்வியடைந்து விட்டன என்பது வருந்தத்தக்க விஷயமே. மனிதனை ஒரு சிறிதாவது சந்தோஷப்படுத்த முடியவில்லை. காரணம் என்ன? நமது மனம் ஓரிடத்திலும் நிற்பதில்லை. மேலும் மேலும் இந்திரிய சுகங்களை நோக்கி நம்மை விரட்டுகிறது. நாமும் ஆடு மாடுகளைப் போல் அதைப் பின்பற்றுகிறோம். புலன்களை வென்று இந்த மனத்தின் நுண்ணிய வேலைகளை அறிந்து கொண்டு அவற்றைத் தன் கைக் கீழ் எவன் கொண்டு வருகிறானோ அவன் தான் சந்தோஷமாக இருக்க முடியும்.

பெட்டுலால் : நண்பர்களே! வேண்டாத விவாதத்தில் இவ்வளவு நேரம் வீணாகிவிட்டது. சுவர்க்கமும், நரகமும், வாழ்வும், வாழ்வுக்குப் பின்னும், மதமும், கடவுளும், நல்லதும்,

கெட்டதும், எல்லாமே நம்முடைய பலஹீனமான மனதின் சிருஷ்டிகள் தான். சாவுக்குப் பின் தன்னுடைய உற்றார், உறவினர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதைப் பார்க்க ஒருவரும் திரும்பி வருவதில்லை. என்னைப் பொறுத்த மட்டில் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் உண்டு உடுத்துக் களித்திருக்க வேண்டும். ஏனெனில் இன்றைக் கிருப்போர் நாளை இருப்பது என்ன நிச்சயம்!

**தேச ராஜ் :** இல்லையில்லை, நீங்கள் சொல்லுவதை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது. நம்மைச் சுற்றியுள்ள ஜனங்களின் குறைகளையும், நன்மைகளையும் எண்ணாது அவ்வளவு தூரம் சுயநலம் கருதுவது தவறு. நாம் நம்முடைய நடத்தையில் ஒழுங்காக இருந்து, சமூகத்தின் நன்மை, தீமைகளைப் பகிர்ந்து கொண்டால், அதுவே லட்சிய வாழ்க்கையாகும். பட்டினி கிடந்து மடியும் லட்சக்கணக்கான மக்களை நம்மால் புறக்கணிக்க முடியாது. இன்றைக்கு நம்மால் முடிந்ததைச் செய்தால் நாளை நமக்குக் கட்டாயமாகப் பிரதிபலன் கிட்டும்.

**சேவாராம் :** குறுக்கிடுவதற்கு மன்னிக்க வேண்டும். ஆனால் நீங்கள் செய்யும் ஒறு சிறு உதவிக்கும் பிரதிபலன் எதிர்பார்த்தீர்களேயானால், அதுவும் சுயநலமேயாகும். வித்தியாசம் அளவில் தான். உண்மையில் நாம் செய்ய வேண்டியது என்னவெனில் நம் செய்கைகளையெல்லாம் அவற்றின் பயன்களோடு இறைவனுக்கர்ப்பணம் செய்துவிட வேண்டும்.

**சுந்தர் தாஸ் :-** சகோதர சகோதரிகளே, உண்மையில் நாமெல்லோரும் நம்மிஷ்டப்படி வேறுபட்ட கொள்கைகள் ஒத்துகொள்ள சம்மதிக்க வேண்டும். நம்முடைய வித்தியாசத்தையெல்லாம் விட்டு விட்டு நாம் ஒவ்வொருவரும் எங்கே போகிறோம் என்பதைப் பார்ப்போம்.

எல்லோருமாக ஏன் ஹரித்துவாருக்குத்தான்.

சுந்தர் தாஸ் : சரி, நம்முடைய கொள்கைகள் வேறுபட்டதாயிருந்தாலும், எல்லோருக்கும் ஹரித்துவாரில் தங்கியிருக்க இடம் வேண்டுமல்லவா. அதைப் பற்றி யோசிக்கலாம்.

தேச ராஜ் : அதைப் பற்றி நீங்கள் கவலைப் பட வேண்டாம். எல்லோருக்கும் சம்மதமானால், நானே இந்த வேலையை ஏற்றுக் கொள்கிறேன்.

சேவா ராம் : நான் வேண்டிய உதவி செய்ய முன் வருகிறேன்.

எல்லோருமாக : சரி, இவர்களிருவரும் வேண்டிய ஏற்பாடுகள் செய்யட்டும்.

## காட்சி – 4

*(ஹரித்துவாரில் ஓரிடம்)*

(மோஹினி, சன்சாரி நாத் இருவரும் ஒரு அறையில் அமர்ந்திருக்கிறார்கள். கதவுக்கு வெளியே 'நாராயண ஹரி' என்ற சத்தம் கேட்கிறது. சன்சாரி நாத் வெளியே போய் யோகானந்தன், ஞானானந்தன் என்ற இரு பிரம்மச்சாரிகளுடன் திரும்புகிறான். அனைவரும் ஆசனங்களில் அமருகின்றனர்).

**யோகானந்தன் :** நண்பரே, இந்தப் புண்ணிய தினத்தில் நீர் இங்கு வந்திருப்பது உம்முடைய அதிர்ஷ்டமே. நாங்கள் தபோவனத்திலுள்ள ஒரு ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள். அங்கு எங்கள் குரு மகராஜ் இன்னும் பல சிஷ்யர்களுடன் வசித்து வருகிறார். ஆசிரமத்திற்காக பிக்ஷை பெற்றுச் செல்ல வந்தோம். உங்களை இறைவன் ஆசிர்வதிப்பாராக!

**சன்சாரி :** வணங்குதற்குரிய பிரம்மச்சாரிகளே! வணக்கம். உங்கள் வரவு நல்வரவாகுக. உங்களைக் காணப் பெற்றது என் பாக்கியமே. நீங்கள் வெகு தூரத்திலிருந்து வந்திருக்கிறீர்கள். எனவே சிறிது நேரம் இங்கு தங்கி இளைப்பாற்றிக் கொள்ளுங்கள். சீக்கிரமே பிக்ஷை தயாராகும். மோஹினி, சீக்கிரமாக சமையல் செய். இரு பிரம்மச்சாரிகள் காத்திருக்கிறார்கள்.

**மோஹினி :** இதோ, ஒரு நொடியில் தயார் செய்கிறேன்.

**சன் சாரி :** (பிரம்மச்சாரிகளிடம்) மஹராஜ்! இப்பொழுது தான் முதன் முதலாக நாங்கள் ஹரித்துவாருக்கு வந்திருக்கிறோம். இப்படிப்பட்ட புனித வேளையில் நாங்கள் செய்ய வேண்டியது என்ன? ஊரைச் சுற்றிப் பார்ப்பதும், விருந்துண்பதும், உல்லாசமாகக் காலத்தைக் கழிப்பதுவுமே

சாதாரணமாக எல்லோரும் செய்வது. ஆனால் இவைகள் என் மனதிற்குப் பிடிப்பதில்லை. எனவே இங்கு என் கடமை என்ன என்பதை உணர்த்துங்கள்.

யோகானந்தன் : புண்ணிய ஸ்தலங்களுக்குப் போகும் போது, தேவையான சாமான்களை உடன் எடுத்துச் செல். போன இடத்தில் உனக்கு வேண்டியவற்றை எதிர்பாராதே. ஒரு ஜபமாலை பகவத் கீதை, படிப்பதற்குச் சில புத்தகங்கள், தியானத்திற்கான ஒரு மான் தோல், இவைகளையெல்லாம் எப்பொழுதும் வைத்துக் கொள். எப்பொழுதும், எல்லா இடங்களிலும் கிடைத்ததையெல்லாம் சாப்பிடாதே. அனுஷ்டானம் செய். இம்மாதிரியான புண்ணிய பூமியில் செய்யும் ஜபத்தின் சக்தி மகத்தானது. அதன் மூலம் நீ ஆத்மீக முன்னேற்றம் அடைகிறாய். அனுஷ்டான நாட்களில் பாலும், பழமுமே சாப்பிடு. தினமும் இரண்டு மணி நேரம் மகாத்மாக்களுடன் சத்சங்கம் செய். கீதையில் சில அத்தியாங்களைப் படி. தினமும் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் மௌனமாயிரு. அதிகாலையிலும், இரவிலும் நீண்ட நேரம் ஆழ்ந்த தியானம், தீவிர சிந்தனை, ஜபம், பிரார்த்தனை செய். இப்படிப்பட்ட யாத்திரா காலங்களிலும் நாள் முழுதும் உழை. நித்ய சாதனத்தை ஒரு நாளும் விட்டு விடாதே. யாத்திரை ஸ்தலங்களில் அதிகமாக சாதனம் செய்ய வேண்டும். அங்குமிங்கும் அலைந்து கொண்டிராதே. ஏராளமாக தான தருமம் செய். மகாத்மாக்களுக்கும், ஏழைகளுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் தொண்டாற்று. கையில் பழங்களுடன் மகாத்மாக்களையும், சந்நியாசி களையும் பக்தி சிரத்தையுடன் அணுகு. ஆத்மீக உபதேசங் களை வேண்டு. அவர்களுடைய கழிந்த வாழ்கையைப் பற்றி ஆராயாதே. இம்மாதிரியான முறையில் யாத்திரைகள் செய்தால், கொஞ்ச நாட்களில் அபூர்வமான ஆத்மீக முன்னேற்றம் பெறுவாய்.

**சன் சாரி :** (பிரம்மச்சாரிகளிடம்) மகராஜ்! எங்களுடைய பிரயாணத்தின் போது மதம், தெய்வம் என்பதெல்லாம் அவசியம் தானா என்ற ஐயத்தை உண்டாக்கி விட்டனர்; என்னுடன் பிரயாணம் செய்த சிலர். உங்களுடைய குருவைக் கண்டு, அவரிடம் எங்களுடைய சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள விரும்புகிறேன். என்னைத் தயவு செய்து அவருக்கு அறிமுகப்படுத்துவீர்களா?

**ஞானானந்தன் :** சகோதரா அதைப் பற்றிச் சிறிதும் கவலைப் படவேண்டாம். இக்கலியுகத்தில் அம்மாதிரியான சந்தேகங்களும், இடையூறுகளும் ஏற்படுவது சகஜம் தான். இவையெல்லாம் அறியாமை, மாயை இவற்றால் ஏற்பட்டவை. இவைகளை வெல்ல ஒருவன் கூர்மையான அறிவும், சுத்த இதயமும் படைத்தவனாயிருக்க வேண்டும்.

**சன்சாரி :** ஆனால், மகராஜ், நான் அறியாதவனல்ல; நான் ஏமாற்றப் படவுமில்லை. நான் மேலான சர்வ கலாசாலைப் பட்டம் பெற்றவன். மேல் நாட்டு, கீழ் நாட்டு வேதாந்தக் கொள்கைகளை அறிவேன். எந்தப் பிரச்சனை யையும் பற்றி ஆராய்ந்து, அதன் நன்மை, தீமைகளைப் பற்றி விவாதிக்க எனக்குச் சக்தி உண்டு.

**யோகானந்தன் :** நீங்கள் படித்திருப்பது உண்மை. ஆனால் அது உலக அறிவு தான். அந்தப் படிப்பால் தர்மத்தின் நுட்பமான தத்துவங்களை அறிய முடியாது. ஆனால் எங்கள் குரு மகராஜ் உங்களுடைய சந்தேகத்தை எளிதில் தீர்த்துவிடுவார்.

*(சுந்தர் தாஸ் வருகிறான்)*

**சுந்தர் தாஸ் :** சன்சாரி நாத்! இந்தக் காஷாய வஸ்திரதாரிகள் யார்?

**சன்சாரி :** இந்தப் பிரம்மச்சாரிகள் சற்று தூரத்திலுள்ள ஒரு சுவாமிஜியின் ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள். ஆசிரம பிக்ஷைக்காக வந்திருக்கிறார்கள்.

**சுந்தர் தாஸ் :** என்ன சன்சாரி நாத், உன்னைப் போன்ற படித்த மேதாவிகள் கூட இப்படிப்பட்ட யாசகர்களாலும், சமூக விரோதிகளாலும் ஏமாற்றப்படுவது வருந்தத் தக்கதே.

**யோகானந்தன் :** லாலாஜி! சந்நியாசிகளும், பிரம்மச்சாரிகளும் சமூகத்தில் ஒரு முக்கியமான தொழில் புரிகிறார்கள். ஆத்மீகத் தொண்டர்களால் தான் சமூகத்திற்கு உதவ முடியும். உலகின் அபிவிருத்திக்கான ஆசிகளை அவர்கள் அளிக்கும் போது, அவர்களுடைய அவசியமான தேவைகளை நிறைவேற்ற வேண்டுவது கிரகஸ்தர்களின் கடமையாகும்.

**சுந்தர் தாஸ் :** இந்தக் காலம் சிரமமான காலமாகும். உங்களைப் போன்றவர்களை வைத்துக் காப்பாற்ற ஜனங்களிடம் பணம் இல்லை. தன் தன் வாழ்க்கையில், சாதாரண சௌகரியத்தை அடையவே அவனுடைய காலமும், சக்தியும் செலவாகிறது.

**யோகானந்தன் :** உலக சுகங்கள் மின்னலைப் போல் மின்னி மறையக் கூடியவையே. உலக வாழ்க்கை நீர்க்குமிழி போன்று உடையக் கூடியது. இளமையின் சக்தி அநித்யமானது. இவையெல்லாம் இவ்வுலகத்தின் மாயைகளே. உலக வஸ்துக்கள் எல்லாமே துக்கத்தையே உண்டு பண்ணக் கூடியவை. உலகத்தில் பேரின்பம் ஒரு அணுவளவும் இல்லை. நீங்கள் விரும்பும் செல்வம் மறையக் கூடியதே. செல்வம், மனைவி இவற்றிடம் கொள்ளும் விருப்பமே உன்னைப் பிணைக்கிறது. இந்த க்ஷணம், உனக்கு இனிமையாகவும், மகிழ்ச்சி தரக் கூடியதாகவும் உள்ள வஸ்துவே, மறுக்ஷணம்

நேர் மாறான உணர்ச்சியை உண்டாக்குகிறது. இவ்வுலகில் இதை உணராதவர் எவருமிலர். எனவே அறிவாளியான மனிதர்களின் கடமை என்னவெனில், அவன் தன்னுடைய மனதை ஆத்மாவைப் பற்றிய தீவிர சிந்தனையில் ஆழ்த்தி, பேரின்பத்தையும், பரம சாந்த நிலையையும் அடைவதேயாகும்.

**சுந்தர் தாஸ் :** ஆனால் உங்களைப் போன்றவர்கள் சமூகத்தின் செல்வத்தை அதிகரிக்க வழி தேடுவதில்லையே. அன்றியும் சோம்பேறித்தனமான வாழ்க்கை நடத்துகிறீர்கள்.

**ஞானானந்தன் :** நாங்கள் உலகின் ஆத்மீகச் செல்வத்தை வளர்க்கிறோம். வெளிப் பார்வைக்கு யோகி செயலற்றவனாகக் காணப்படுகிறான். ஆனால் அச் செயலின்மையிலும் அவன் செயல்புரிகிறான். அவனுடைய தியானத்தில் சமாதானம், செழிமை ஆகிய அலைகளை உலகிற்களிக்கின்றான். ஆனால் நீங்கள் உண்மையான மகாத்மாவைப் பார்த்ததில்லை போலும். அவர்களை அளந்து பார்ப்பது மிகவும் சிரமமான காரியம்.

**யோகானந்தன் :** நீங்கள் ஒரு முறை எங்கள் குரு மகராஜைத் தரிசித்தால், இப்படிப்பட்ட சந்தேகங்களெல்லாம் தீர்ந்து விடும்.

**சுந்தர் தாஸ் :** உங்கள் குரு உண்மையிலேயே பெரிய யோகியாயிருக்கலாம். ஆனால் நீங்கள் யார்? குருவின் பெயரால் பிழைப்பவர்கள் தானே? இதுவரை நீங்கள் ஏதாவது செய்திருக்கிறீர்களா?

**யோகானந்தன் :** நான் ஹடயோகம் செய்வேன். ஆசனங்கள், பிராணாயாமம், பந்தம், முத்திரை முதலியன செய்வேன். தியானம் தீவிர சிந்தனை, ஏகாக்ர சித்தம் பயிற்சி இவற்றில் எனக்குத் தேர்ச்சி உண்டு. ஷட்சக்கரங்கள்

ஒவ்வொன்றிலும் தியானம் செய்ய நான் முயற்சித்து வருகிறேன். நான் உள்ளும், புறமும் சுத்தமானவன். கடந்து பத்து வருஷங்களாகப் பிரம்மச்சரியம் அனுஷ்டித்து வருகிறேன்.

**ஞானானந்தன் :** நான் வேதங்கள், சிக்ஷா, வியாகரணம், கல்பம், நிருத்தம், ஜோதிடம், உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரங்கள், வேதாந்த விரிவுரைகள் அனைத்தும் படித்திருக்கிறேன். வேதாந்த தத்துவத்தின் மேன்மையை எவருக்கும் விளங்க வைக்கும் சக்தி எனக்கு உண்டு.

**சுந்தர் தாஸ் :** அதெல்லாமம் சரிதானய்யா. தூக்கத்திலேனும், விழித்திருக்கும் போதிலேனும் எப்பொழு தாவது கடவுளைக் கண்டிருக்கிறீர்களா? என் நண்பரின் மனைவி பக்தி சிரத்தை உடையவர். பல தடவைகள் கடவுளைக் கண்டிருக்கிறார். சரி, சரி, உங்களுடன் விவாதத்தில் இறங்குவது காலவிரயம் என்றே நம்புகிறேன்.

*(சுந்தர் தாஸ் வெளியேறுகிறான்)*

**சன்சாரி :** (ஞானானந்தனிடம்) பெரியோர்களே, மன்னித்தருள வேண்டும். என் நண்பர் உங்களுக்கு மனத் தாங்கள் உண்டு பண்ணிவிட்டார். எப்படியும் அவரவருக்கு அவரவருடைய யோசனைகளைக் கொள்ள உரிமையுண்டு. ஆனால் எனக்கு வருத்தமென்னவெனில், நாளுக்கு நாள் இப்படிப்பட்ட எண்ணங்கள் வளர்ந்து வருகின்றன. அதன் பயனாக நம்பிக்கை தளர்ந்து போகிறது.

**மோஹினி :** நம்முடைய காரியங்களில் பிறர் குறுக்கிடுவானேன்? அவர்களுக்குத் தான தருமம் செய்ய இஷ்டமில்லாவிடில், கொடுப்பவர்களையும் கெடுப்பானேன்? (ஞானானந்தனிடம்) ஐயா! எங்களைத் தயவு செய்து உங்கள்

குருவிடம் கூட்டிச் சென்று, எங்களுடைய ஐயத்தைப் போக்கி, தான தருமங்களின் பலனையும், மஹிமையையும் எங்கள் மனதில் பதிய வைக்க வேண்டுமாகக் கேட்டுக் கொள்கிறேன்.

**சன்சாரி நாத் :** பிறவியின் லட்சியம் தான் என்ன — உண்டு, உடுத்து, உறங்குவதற்கா அல்லது வேறு ஏதாவது உயர்ந்த லட்சியத்தை எட்டவா? உங்கள் குரு இதையும் நன்கு தீர்த்து வைப்பார் என்பது என்னுடைய நம்பிக்கை.

**ஞானானந்தன் :** கட்டாயமாகச் செய்வார். ஒரு சிறிது அவருடைய உபதேசங்களுக்குச் செவி சாய்ப்பீர்களே யானால், நீங்கள் பயனடைவீர்கள். இன்று பிற்பகல் வந்து தங்களை அழைத்துப் போகிறேன்.

**சன்சாரி :** கட்டாயமாக பிற்பகல் வந்து எங்களை அழைத்துச் செல்ல வேண்டும். சிரமத்தைப் பார்க்கக் கூடாது.

**ஞானானந்தன் :** இதில் சிரமமென்ன? நான் கட்டாயமாக வருகிறேன். தற்சமயம் விடை பெற்றுக் கொள்கிறேன். ஓம் நமோ நாராயணாய.

## காட்சி – 5

*(வியாச ஆசிரமத்திற்கு எதிரில் சுவாமிஜியின் ஆசிரமம் – சுவாமிஜி ஒரு மான் தோலில் அமர்ந்திருக்கிறார். சிஷ்யன் ஆத்மானந்தன் குருவின் தேவைகளைக் கவனிக்கிறார்).*

**சுவாமிஜி** : ஆத்மானந்தா! ஞானானந்தன், யோகானந்தன் இருவரையும் ஹரித்துவார் கும்பமேளாவுக்கு பிக்ஷைக்காக அனுப்பியிருக்கிறேன். என்னுடைய நோக்கமென்ன' வெனில் தெய்வீக வாழ்க்கையைப் பற்றிக் கற்றுக் கொள்ளக் கூடிய சிரத்தையுள்ள தம்பதிகள் அகப்படுவார்களா என்று பார்ப்பது தான். உண்மையான சன்னியாசிகளின் கடமை இது தான். உலக மக்களுக்கு ஆத்மீக அறிவைப் புகட்டி அதன் மூலம் பேரின்பத்தையும், பரம சாந்தியையும் அடைய அவர்களுக்கு வழிகாட்ட வேண்டும். அதன் மூலம் பிறப்பு, இறப்பு என்னும் சுழலிருந்து தப்பவேண்டும். இன்று கட்டாயமாக அப்படிப்பட்ட தம்பதிகள் யாராவது கிடைத்திருப்பார்கள் என்று நம்புகிறேன்.

**ஆத்மானந்தன்** : உண்மை குரு தேவா. இக்காலத்தில் நல்ல சம்ஸ்காரங்களுடன் கூடிய மனிதர்கள் அகப்படுவது துர்லபமே. இப்படிப்பட்ட புண்ணிய மேளாக் கூட்டத்தில் ஜனங்கள் வேடிக்கையைக் கருதி வருகிறார்களேயன்றி, அறிவு பெற எண்ணி வருவதில்லை. யோகானந்தனும், ஞானானந்தனும் அப்படிப்பட்ட ஆட்களைத் தேடும் வேலையில் மிகவும் சிரமப்படுவார்கள்.

**சுவாமிஜி** : நீ சொல்வது சரி தான். ஆனால் லட்சக் கணக்கில் ஜனங்கள் கூடியிருக்கும் போது, அதில் ஒரு சிலராவது சாஸ்திரோபதேசம் பெறத்தக்கவர்களாக இருப்பார்கள்.

**ஆத்மானந்தன் :** இப்படி உபதேசம் பெறத் தக்க அதிகாரிக்கு என்னென்ன லட்சணங்கள் இருக்க வேண்டும் சுவாமி?

**சுவாமிஜி :** சொல்லுகிறேன், கேள். எவன் தன்னுடைய பெற்றோர்களிடம் அன்பு வைத்திருக்கிறானோ, எவன் சாந்த மனம் படைத்தவனாயிருக்கிறானோ, எவன் தன் புலன்கள் அனைத்தையும் அடக்கி விட்டானோ, எவன் ஒரு நிலைப்பட்ட மனம் உடையவனாயிருக்கிறானோ, எவன் நான்கு வித உபாயங்களையும் கையாளுகிறானோ, எவனிடம் சாத்வீக குணங்கள் குடிகொண்டுள்ளனவோ எவன் தன்னலமற்ற சேவையினால் சித்த சுத்தியடைந்திருக்கிறானோ, எவன் தெய்வ வழிபாடு, ஜபம், கீர்த்தனம் இவற்றின் மூலம் மனத்தின் சஞ்சலத்தை நிருத்தி விட்டானோ, கடைசியாக எவன் வேதாகமங்களைக் கரை கண்ட குருவின் சரணார விந்தங்களில் அமர்ந்து கொண்டு கற்கிறானோ, அவனே அம் மெய்ப் பொருளை அறிந்து கொள்ளத் தகுந்தவன்.

*(யோகானந்தனும், ஞானானந்தனும் உள்ளே பிரவேசித்து சுவாமிஜியை நமஸ்கரிக்கிறார்கள்)*

**யோகானந்தன் :** ஓம் நமோ நாராயணாய! சுவாமிஜி மஹராஜ், நல்ல ஸமஸ்காரங்களையுடைய ஒரு தம்பதிகளை அழைத்து வந்திருக்கின்றோம். ஆனால் அவர்களுடைய அறிவு நாஸ்திகர்கள், உலகாயத மனப்பான்மை கொண்டவர்கள், மற்றும் மத விரோதிகளின் விவாதங்களால் ஒரு சிறிது தளர்ந்திருக்கிறது; அவர்களுடைய சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டி வந்துள்ளார்கள்.

**சுவாமிஜி :** குழந்தைகாள், அப்படிப்பட்ட மக்களுக்கு நான் உதவ வேண்டுவது அவசியமே. நான் அவர்களுக்கு வேண்டியன செய்கிறேன். ஏனெனில் அனைவருக்கும் தொண்டு புரியவே உள்ளேன். அனைவரையும் மகிழ்விக்கவே யானுள்ளேன். சரி, அவர்களை உள்ளே அழைத்து வா.

*(யோகானந்தன் வெளியே போய் சன்சாரி நாத், மோஹினி இருவருடனும் திரும்பி வருகிறான். இருவரும் சுவாமிஜியின் முன் பணிகின்றனர். சுவாமிஜி ஆசிர்வதிக்கிறார். அனைவரும் அமர்ந்த பின் சுவாமிஜி சம்பாஷணையைத் துவக்குகிறார்).*

**சுவாமிஜி :** குழந்தைகாள், வாருங்கள்! யோகானந்தன் தங்களைப் பற்றி அனைத்தும் கூறினான். நீங்கள் வந்தது நல்லதாகப் போயிற்று. இனி மேல் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. உங்கள் சந்தேகங்களை எடுத்துக் கூறுங்கள். முடிந்த வரையில் பதில் கூறுகிறேன்.

**சன்சாரி :** சுவாமிஜி! மனிதனுக்கு கடந்த வாழ்க்கை, இனி வரப்போகும் வாழ்க்கை என்று இருக்கின்றனவா? அவற்றைக் குறித்து அவன் கவலைப்பட வேண்டுவது அவசியம் தானா? அப்படி பல ஜன்மங்கள் உண்டானால், அவற்றை ஏன் அவன் அறிவதில்லை.

**சுவாமிஜி :** மனித ஆத்மா நித்யமானது. பிறப்பு இறப்பு என்ற சக்கரத்தில் சுழன்று கொண்டேயிருக்கிறது. அது எண்ணத் தொலையா வாழ்க்கைகளின் தொடர்ச்சி. சரீரத்துக்கு இவ்வுலகில் எங்ஙனம் பிள்ளைப் பிராயமும், இளமையும், மூப்பும் தோன்றுகின்றனவோ, அங்ஙனமே மற்றொரு சரீரப் பிறப்பும் தோன்றுகிறது. இரண்டுக்கும் வித்தியாசம் என்னவெனில் முதல் மூன்றும் நம்முடைய அறிவுக்குப் புலப்படும். ஆனால் ஆத்மா கொள்ளும் மாறுதலோ புலனுக்கு எட்டாதது. தூய, நுட்பமான, ஏகாக்ர சித்தமுடைய யோகி உள்ளுணர்வு கொண்ட மனத்தின் கண் ஸம்யமம் செய்து தன்னுடையவும், பிறருடையவும், கடந்த வாழ்க்கைகளை அறிகிறான். சாதாரண மனிதனால் அவ்விதம் தன் கடந்த வாழ்க்கையை அறிய முடியாது. ஏனெனில் அவனுடைய மனம் அசுத்தமாயும், சஞ்சல சுபாவம் உள்ளதாகவும், கூர்மையற்றதாகவும் இருக்கிறது. ஸம்யமம் அல்லது தாரணை,

தியானம், சமாதி இவைகளை ஒரே நேரத்தில் அப்யசிக்க அவனுக்குத் தெரியாது. இப்படியாக வாழ்க்கை ஒரு பிளவற்ற தொடர்ச்சி. மறுபிறப்பு முன் செய்த பாப புண்ணியத்தைப் பொறுத்திருக்கிறது.

**சன்சாரி :** இதை அறிந்து கொண்டேன். மனித ஆத்மா அவனுடைய செயல்களுக்குத் தகுந்தபடி எண்ணற்ற பிறப்புகளை அடைகிறது. அடுத்தபடியாக இந்த லோகத்தைத் தவிர வேதங்களில் சொல்லியபடி கந்தர்வ லோகம், சுவர்க்கலோகம், பித்ரு லோகம் என்று வேறு லோகங்கள் இருப்பதாக நாம் எப்படிச் சொல்ல முடியும்?

**சுவாமிஜி :** இவ்வுலகம் நம் பூமியுடன் சேர்ந்த பதினான்கு வெவ்வேறு மண்டலங்கள் அல்லது பூலோகங்களைக் கொண்டது – ஏழு மேலும், ஏழு கீழுமாக, இங்கு இருந்த படியே எப்படி நம்மால் அமெரிக்கா, ஐரோப்பியா முதலிய தேசங்களைப் பார்க்க முடியவில்லையோ, எப்படி அவைகளை அடையக் கப்பல்களும், ஆகாய விமானங்களும் தேவையோ, அங்ஙனமே இந்த உலகங்களும் இம்மானிட தேகத்தால் அடைய முடியாதவை. ஆத்மாவே இவைகளை அடையும். புண்ணிய புருஷர்கள் மேலுலகம் செல்கிறார்கள். பாபிகள் கீழுலகம் செல்லுகிறார்கள். மனிதனுடைய அறிவு ஒரு அளவுக்குட்பட்டிருப்பதாலும், பலஹீனமாயிருப்பதாலும், தங்கள் புலன்களுக்கு எட்டாததை மறுத்துவிடுகிறார்கள் மனிதர்கள்.

**சன்சாரி :** நான் கடவுள் இருக்கிறார் என்பதைப் பற்றிச் சிறிதும் ஐயுறவில்லை. ஆனால் கடவுளுக்கும், மனிதனுக்கும் உள்ள சம்பந்தம் என்ன? மனிதன் ஏன் கடவுளை மனதில் வைத்து வணங்க வேண்டும்?

**சுவாமிஜி :** ஜீவனுக்கும் (மனிதனுக்கும்) ஈசுவரனுக்கும் உள்ள உறவு நெருப்புக்கும் அதன் பொறிகளுக்கும் உள்ள உறவே. சூரியனுக்கும், அதன் கிரணங்களுக்கும் உள்ள உறவே உருவத்திற்கும், அதன் பிரதி பிம்பத்திற்கும் உள்ள உறவே. ஒரு பானையின் உள்ளும், புறமும் உள்ள காற்று எப்படி ஒன்றோ அப்படியே ஆத்மாவும், பரமாத்மாவும் ஒன்று. அவித்தையாகிய திரை ஜீவனைச் சூழ்ந்து கொள்கிறது. அதன் பயனாக அவன் தன்னுடைய உண்மை நிலையை மறந்து, பொய்ப் பெயர்களையும், உருவங்களையும் கொள்ளுகிறான். அநித்தியமான உலக பந்தங்களையும், செல்வங்களையும் விரும்புகிறான். அகத்தினால் நல்லதும், கெட்டதுமான செய்கைகளின் பயன்களில் சிக்கிக் கொள்கிறான். தன் உண்மை ஸ்வரூபத்தை அறிந்து, தன்னை இறைவனுடன் ஐக்யப்படுத்திக் கொள்ள, பரமாத்மாவை வழிபடுதல் முக்கியம். அந்த வழிபாடு இதயத்தைப் பளிங்கு போல் சுத்தமாக்குகிறது. உடனே தெய்வ ஞானம் பிறக்கிறது.

**சன்னாசி :** அபேத வாதிகளும், உலகாயத மனம் கொண்டவர்களும், நாஸ்திகர்களும் மதம் அவசியமற்றதென்றும், ஒரு லட்சிய வாழ்க்கை நடத்த விரும்புவோன் நன்னடத்தையுடனிருந்து தன் பொருளைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதே போதும் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் கூற்று உண்மையா?

**சுவாமிஜி :** இல்லை; அவர்கள் சொல்லுவது தவறு. இவ்வுலக வாழ்க்கையை மட்டுமே கவனிக்கிறார்கள் அவர்கள். இதற்குப் பின்னுள்ள வாழ்க்கையைப் புறக்கணித்து விட்டார்கள். ஆத்மா பரமாத்மா இவர்களிடையே உள்ள பந்தத்தை அவர்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. மதம்

என்பது கடவுளை அறிந்து அவரிடம் அன்பு செலுத்துவதேயாகும். மனிதனின் வாழ்க்கையில் அது மிகவும் அத்தியாவசியமானது.

**சன்சாரி :** சுவாமிஜி, என்னுடைய சந்தேகங்கள் தீர்ந்துவிட்டன.

**சுவாமிஜி :** குழந்தைகாள்! இம்மாதிரியான சந்தேகங்கள் ஆத்மீக சாதனையின் ஆரம்ப காலத்தில் உண்டாவது இயற்கையே. உங்களிடம் நல்ல ஸம்ஸ்காரங்கள் குடி கொண்டுள்ளன. நீங்கள் சிறிது சாதனம் பயில வேண்டும். இதோ என்னுடைய ஆத்மீக உபதேசங்கள். (தன் உபதேசங்கள் அடங்கிய ஒரு துண்டுப் பிரசுரத்தைக் கொடுக்கிறார்). அதில் கண்டவற்றைப் பின்பற்ற உறுதி கொள்ளுங்கள். நாஸ்திகர்களுடன் உறவாடாதீர்கள். ஏனெனில் அதன் மூலம் உங்களுடைய நம்பிக்கைகள் தளர்ந்து விடும். உண்மை, பிரம்மச்சரியம், அஹிம்ஸை மூன்றையும் பயின்று வாருங்கள். சிறிதே பேசுங்கள். ஆனால் இனிமையாகப் பேசுங்கள். தினமும் சில மணி நேரம் மௌனம் அனுஷ்டியுங்கள். பகவத் கீதை, ராமாயணம், பாகவதம் இவற்றைப் படியுங்கள். நம் பழங்காலத்து ரிஷிகளும், மகான்களும் மெய்ப் பொருளை அறிய அரும்பாடு பட்டார்கள். மனிதன், உலகம் இவற்றின் ஆரம்பம், இயற்கை, முடிவு இவற்றைக் குறித்து ஆராய்ச்சி செய்தார்கள். இருத்தல், அறிதல் இவற்றின் பொருளையும், மதிப்பையும் அரிய முயன்றார்கள். உலகில் வாழும் முறையைப் பற்றியும், மனிதனுக்கும், பரமனுக்குமுள்ள உறவைப் பற்றியும், ஆராய்ச்சி செய்தார்கள். தெய்வ ஜீவியத்தை நடத்தி தவம், தன்னாராய்ச்சி, விசாரணை, ஆத்மாவைப் பற்றிய சிந்தனை செய்து ஆத்ம ஞானமடைந்தார்கள். இந்த ஆழ்ந்த உண்மைகளைப் பற்றிய அவர்களுடைய அறிவுரைகள்

நுட்பமானவை. ஆனால் எளிதானவை. அவர்களுடைய உள் அனுபவங்கள் நேரானவை, மேலானவை, மர்மமானவை, எந்த ஸாஸ்திரமும் அதை மறுக்க முடியாது. எல்லா வேதாந்தமும் அதையே ஆராய்ச்சியின் முடிவாக ஒப்புக் கொள்கிறது. அவைகள் தான் உபநிஷதங்கள் என்ற மேலான நூலில் பொதிந்து கிடக்கின்றன. கீதை இந்த உபநிஷதங்களின் சாரம். உபநிஷதங்களைப் படிக்க முடியாவிட்டால், கீதையையாவது படியுங்கள். காலையில் தவறாது ஜபம். தியானம் செய்யுங்கள். இது தான் தேவ ஜீவனம்.

*(பஜோ ராதே கோவிந்த என்று பாடுகிறார்)*

*பஜோ ராதே கோவிந்த,*
*ராதே கோவிந்த பஜோ ராதே கோவிந்த,*
*ராதே கோவிந்த பஜோ, சீதா கோவிந்த,*
*ஹரி போலோ போலோ பாய் ராதே கோவிந்த*
*மோகன பன்ஸி வாலே தும்கோ லாகோ ப்ரணாம்*
*தும்கோ லாகோ ப்ரணாம்*
*சங்கர் போலே வாலே தும்கோ லாகோ ப்ரணாம்*
*தும்கோ லாகோ ப்ரணாம்*
*லாகோ ப்ரணாம் ப்யாரே கரோடோ ப்ரணாம்.*

*காலையில் நான்கு மணிக்கே யெழுவாய் பிரம்ம முகூர்த்தம்*
*காலையில் நான்கு மணிக்கே யெழுந்து பஜிப்பாய் ஹரி நாமம்*
*காலையில் நான்கு மணிக்கே யெழுந்து யோசிப்பாய் நானாரென்று.*
*காலையில் நான்கு மணிக்கே யெழுந்து சிந்தனை செய்குவாய்.*
*காலையில் நான்கு மணிக்கே யெழுந்து ஆசனம் பயிலுவாய்.*

பிரம்ம முகூர்த்தத்தில் நாலு மணிக்கு எழுந்திருங்கள், "ராம் ராம்" என்று ஜபம் செய்யுங்கள். தினமும் இரண்டு மணி நேரம் மௌனம் அனுஷ்டியுங்கள். ஏகாதசியில் பட்டினி விரதமிருங்கள். பாலும் பழமுமே சாப்பிடுங்கள். தினமும் கீதையில் ஒரு அத்தியாயமேனும் படியுங்கள். வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை தானம் செய்யுங்கள். உங்கள் வேலையை நீங்களே செய்க. இரவில் கீர்த்தனம் செய்யுங்கள். ஸத்சங்கம் கொள்ளுங்கள். உண்மையே பேசுங்கள். அஹிம்ஸையைக் கடைப்பிடியுங்கள். எல்லோரையும் நேசியுங்கள். பிறர் மனதை நோகச் செய்யாதீர்கள். பொறுமையால் கோபத்தை அடக்குங்கள். விஸ்வ பிரேமை கொள்ளுங்கள். ஆத்மீகக் குறிப்பேடு வைத்துக் கொள்ளுங்கள்.

(மோஹினியிடம்) குழந்தாய், தினமும் ஏதாவது ஒரு மந்திரத்தை ஜபி. ராமாயணத்தைப் படி. சீதையைப் பின்பற்று. கணவனுக்குப் பணிவிடை செய். உலக வஸ்துக்களில் பாசம் வைக்காதே. கிருஷ்ண பகவானின் படமொன்றை உன் அறையில் வைத்து ஏதாவது பூஜை செய். உன் கணவரும் இதைக் கூடச் செய்யலாம்.

சன்சாரி, மோஹினி இருவரும், என்ன மந்திரத்தை ஜபிக்கலாம், சுவாமிஜி.

சுவாமிஜி : 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய:'

*(இருவரும் சுவாமிஜியை வணங்கி விட்டுத் திருப்தியுடன் வெளியேறுகிறார்கள்)*

## காட்சி- 6

(ஹரித்துவாரத்தில் கங்கையில் நீராடும் துறை)

(ஹரிதாஸியும், மஞ்ஜீத் சிங்கும் குளித்து விட்டு, கரையேறுகிறார்கள். வழியில் சன்சாரி நாத், மோஹினி இருவரையும் சந்திக்கிறார்கள்)

**மஞ்ஜீத் சிங் :** என்ன சன்சாரி நாத்இன்று ஏன் தாமதம்? நம்முடைய ஜனங்கள் எல்லோரும் குளித்து விட்டுப் போய் விட்டார்களே?

**சன்சாரி :** நண்பரே! நாங்களும் முன்பேயே எழுந்து விட்டோம். ஆனால் மோஹினியும், நானும் பூஜை செய்து விட்டு சுவாமிஜியின் ஆத்மீக உபதேசங்களைப் பின்பற்றிக் கொண்டிருந்தோம்.

**மஞ்ஜீத் சிங் :** என்ன பூஜையோ! இதற்கு முன் நீங்கள் பூஜை செய்து நான் பார்த்ததில்லையே. ஹரித்துவாருக்கு வந்ததில் நல்ல பலன் கிட்டி விட்டது போலும்.

**சன்சாரி :** ஹரித்துவாரினால் அல்ல. தபோவனத்திலுள்ள சுவாமிஜியின் அருளால் தான். நேற்று அவரைத் தரிசிக்கச் சென்றிருந்தோம். என்னுடைய சந்தேகங்களெல்லாம் அவருதவியால் தீர்ந்துவிட்டன. மேலும் சுவாமிஜியிடமிருந்து உபதேசம் பெற்றுக் கொண்டோம். அவருடைய பொன் மொழிகளைப் பின்பற்றுவதென்று இருவரும் தீர்மானித்திருக் கிறோம். இப்படிப்பட்ட ஒரு மகானை நான் இதுவரை கண்டதில்லை.

**மஞ்ஜீத் சிங் :** சந்தோஷம். இப்படிப்பட்ட ஒரு சத்குரு தங்களுக்குக் கிடைத்ததுபற்றி பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். எனக்கும் அவரைத் தரிசிக்க ஆவலாயிருக்கிறது. இன்று பிற்பகல் எங்களை அங்கு கூட்டிச் செல்லுகிறீர்களா?

**சன்சாரி :** அப்படியே செய்கிறேன். சுவாமிஜியின் ஆசிரமத்தில் எவரும் வரலாம். எல்லோரையும் ஒன்றாகவே பாவிப்பார். இன்று பிற்பகல் அங்கு போவோம். வரும்போது ஸேவா ராமையும் உடன் அழைத்து வரவும்.

**மஞ்ஜீத் சிங் :** அப்படியே!

## காட்சி – 7

*(சுவாமிஜியின் ஆசிரமம்)*

*(சுவாமிஜி சங்கீர்த்தன வகுப்பு நடத்திக் கொண்டிருக் கிறார். எல்லோரும் அவரைப் பின்பற்றுகிறார்கள்).*

சுவாமிஜி :–

*ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரேஹரே*
*ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண*
*கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே.*

உண்டு, உடுத்து, உறங்குவது தானா வாழ்க்கையின் லட்சியம்? பீஹார் குவெட்டா பூகம்பங்களினின்றும் நீ என்ன கற்றுக் கொண்டாய்? நிலையான வைராக்கியம் பெற்றுவிட்டாயா? ஜபம், கீர்த்தனம் செய்கிறாயா?

*ஹரே ராம ஹரே ராம . . . . . . . .*

மன்னனையும், மற்றோரையும் காலம் இழுத்துச் செல்கிறது. யுதிஷ்டிரன் எங்கே? அசோகன் எங்கே? ஷேக்ஸ்பியர் எங்கே? வால்மீகி எங்கே? மனம் மோனத்தில் நிலைக்குங்கால், ஆத்ம ஞானம் பெறுவாய். காலத்தை சினிமாவிலும், சீட்டாட்டத்திலும் செலவிட்டால் நிலையான சாந்தி பெற முடியுமா? வீண் பேச்சிலும், சண்டையிலும் செலவிட்டால் நீ பேரின்பம் பெற முடியுமா?

*ஹரே ராம ஹரே ர . . . . . . . .*

யோக சாதனையில் விழித்திரு. நீ பேரின்பம் பெறுவாய். ஜப சாதனையில் விழித்திரு. நீ நிலையான சாந்தி பெறுவாய்.

*ஹரே ராம ஹரே ராம.*

(சன்சாரி நாத், மோஹினி, மஞ்ஜீத் சிங், ஹரிதாஸி, சேவா ராம் அனைவரும் உள்ளே வருகிறார்கள். வணங்கி விட்டுப் பின்னர் ஆசனங்களில் அமருகிறார்கள் – சுவாமிஜி வழக்கம் போல் உபதேசத்தை ஆரம்பிக்கிறார்கள்).

சகோதரர்களே, வாழ்க்கை என்பது என்ன? உண்டு, உடுத்து, உறங்கி, ஆடிப் பாடுவதா வாழ்க்கை? பணமும், பெயரும், புகழும் அடைய முயற்சிப்பது தானா வாழ்க்கை? வம்சம் தடைப்படாமலிருக்க வேண்டி வம்ச விருத்தி செய்வதுதானா வாழ்க்கை? அல்லது இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்தது தானா வாழ்க்கை? விஞ்ஞானிகளும், உடற்கூறு நிபுணர்களும் வாழ்க்கையைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம் வேறு. சங்கரரைப் போன்ற வேதாந்திகள் வாழ்க்கையைப் பற்றிக் கொண்டுள்ள எண்ணங்கள் வேறு. வாழ்க்கை இரண்டு வகைப்பட்டது – தேகத்தை ஒட்டிய வாழ்க்கை. ஆத்மீக வாழ்க்கை, உடற் கூறு நிபுணர்களும், விஞ்ஞானிகளும், எண்ணம், உணர்ச்சி, அறிதல், விரும்புதல், ஜீரணம், இரத்த ஓட்டம், சுவாசம், அசுத்த நீக்கம் இதையே வாழ்க்கை என்று சொல்கிறார்கள். இப்படிப்பட்ட வாழ்க்கை அநித்தியமானது. இப்படிப்பட்ட வாழ்க்கையில் ஆபத்து, துக்கம், பயம், கவலை, வருத்தம், பாபம், பிறப்பு, இறப்பு அவற்றுடன் கூடிய மூப்பு, வியாதிகள் அனைத்தும் சேர்ந்துள்ளன. எனவே மனதையும், புலன்களையும் கட்டுப்படுத்தி, தவம், தியாகம், செய்து, வைராக்கியம், அப்பியாசம், தன்னல மறுப்பு இவற்றினால் ஆத்ம ஞானமெய்திய பழம் பெரும் வேத ரிஷிகளும், மகான்களும், ஞானிகளும், யோகிகளும், ஆத்மீக வாழ்க்கையே பரம சாந்தி, பேரின்பம், நித்ய திருப்தி, அமரத்துவம், இவற்றை அளிக்க வல்லது என்று அச்சுறுத்தியிருக்கிறார்கள். ஒவ்வொரு தனி மனிதனின் மாறுபட்ட இயற்கை, சக்தி, ருசி இவற்றிற்குத் தக்கபடி ஆத்ம ஞானமடையப் பல்வேறு நிச்சயமான

வழிகளைக் காட்டியிருக்கிறார்கள். ஆத்ம ஞானம் பெறுவது தான் உன்னுடைய மேலான கடமை. இதுவே மனித வாழ்க்கையின் உன்னத லட்சியம். இதுவே வாழ்க்கையின் மிகச் சிறந்த பேறு. இதுவே கடைசி நிலை. இதைத் தான் நிர்வாணம் பரமானந்தம் பிரம்ம நிலை என்றெல்லாம் சொல்லுகிறார்கள்.

ஆத்மீக வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதால் இவ்வுலக வாழ்க்கையைத் துறந்து விட வேண்டுமென்பதல்ல. வஸ்து என்பது கடவுள் அல்லது பிரமனின் ஒரு தோற்றம் (உருவ மாற்றம்). அது அவருடைய லீலைக்காகவே ஏற்பட்டது இவ்வுலகின் கண் மனித வாழ்க்கை பரமனிடத்தில் சேர்க்க வேண்டிய, அமர வாழ்வுக்கு ஒரு பயிற்சியாகும். தயை, மன்னிக்கும் தன்மை, சகிப்புத் தன்மை, விசுவப்பிரேமை, தாராள மனப்பான்மை, மனோ திடம், பெருந்தன்மை, பொறுமை, உறுதியான மனோ நிலைமை இவை போன்ற தெய்வீக குணங்களைப் பயிலச் சரியான இடம் இவ்வுலகமே. கீதை, யோகவாசிஷ்டம் இவற்றின் முக்கியமான உபதேசமே மனிதன் இங்கிருந்து தான் ஆத்ம ஞானத்தை அடைய வேண்டும் என்பது தான். "உலகில் இரு, ஆனால் அதற்கு வெளியே இரு. தாமரை இலைத் தண்ணீர் போல் இரு." தன்னலம், பேராசை, கோபம், ஆசை, வெறுப்பு, பொறாமை இவற்றை விட்டு விட்டுத் தெய்வீக குணங்களை வெளிப்படுத்து. ஆத்ம தியாகம், துறவு இவற்றோடு கூடிய வாழ்க்கையை நடத்து.

உண்ணுவதும், உறங்குவதும் தானா மனித வாழ்க்கையின் லட்சியம் ? மனிதப் பிறவியெடுப்பது மிகவும் கடினமான காரியம். எனவே இவ்வாழ்க்கையில் முடிந்த மட்டும் ஞானம் பெறு. காலம் எல்லா ஜீவன்களையும் அடித்துச் செல்லுகிறது. அரசனாயினும், ஆண்டியாயினும்

ஒன்றே. எனவே விழித்திரு. யோக சாதனை செய்து பேரின்பத்தை அனுபவி. உன் காலத்தைச் சீட்டிலும், சினிமாவிலும், வீண் பேச்சிலும், சிற்றின்ப வேட்கையிலும் செலவிட்டால் நீ எப்படி உண்மையான சாந்தி, பேரின்பம் இவற்றை அடைய முடியும்? அன்றாட வாழ்க்கையில் அடியும், மிதியும் பட்டால் மனம் தானாகவே ஆத்மீகப் பாதையில் திரும்பும். உடனே விவேகம், வைராக்கியம், உலக வஸ்துக்களில் வெறுப்பு விடுதலையில் ஆசை பிறக்கும்.

வாழ்க்கை என்பது லட்சியத்திற்காகப் பாடுபடுவதே. வாழ்க்கை என்பது வெற்றி காண்பதே. வாழ்க்கை என்பது தொடர்ச்சியான விழிப்புகள். உன் உண்மையான விரோதிகளை வெல் – மனம், புலன்கள் இரண்டையும் உன் சூழ்நிலைகளையும் பழைய கெட்ட வழக்கங்களையும், கெட்ட ஸம்ஸ்காரங்களையும், கெட்ட வாசனைகளையும் வெல்ல வேண்டும். நம்மைப் பின்னுக்கிழுக்கும் சக்திகளை எதிர்த்து நிற்க வேண்டும்.

இந்த வாழ்க்கை ஆத்ம ஞானத்திற்காக ஏற்பட்டதே. தவறாது சங்கீர்த்தனம் செய்து, ஆத்மானந்தத்தை அனுபவி. பற்றற்ற தன்னலமற்ற கர்ம யோகம் செய்து உன் மனதையும் இதயத்தையும் சுத்தப் படுத்து. இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, உன் இயற்கை உருவிலே (சுவரூபத்திலே) நிலைத்திரு.

ஆத்மீக வாழ்க்கையென்பது கலப்பற்ற சுத்தானந்தத்தின் அனுபவமேயாகும். அது பூரணமான வாழ்வு. இப்படிப்பட்ட சாசுவதமான ஆனந்தமும், சந்தோஷமும் கிடைக்கும் இந்த வாழ்க்கையை அடைய உங்களுக்கு விருப்பமில்லையா?

அப்படி விருப்பமிருக்குமாயின், மனதையும், புலன்களையும் கட்டுப்படுத்து. மேலான குணங்களைப் பயிலு. ஆத்மாவின் தன்மையை உணர பயிற்சி செய். உன் ஆத்மா இந்த தேகத்துடன் கூடியது என்ற எண்ணத்தை விட்டு விடு.

ஆத்மாவும், தேகமும் ஒன்றென்று நினைப்பது பாபம். எதிர் காலத்தைக் குறித்துத் திட்டமிடுவதை விட்டு விடு. அனுமானங்களை விட்டு விட்டு உள்ளத்தில் போற்றி வளர்க்கும் ஆசைகளையும், வீண் நம்பிக்கைகளையும் விட்டு விடு. விருப்பங்களையும் ஒழி. அவற்றைக் கடந்து அப்பால் சென்று விடு. அப்பொழுது தான் நீ அமரத்துவமடைவாய், பூரணானந்தமெய்துவாய். புத்தியுடன் வாழ். உபநிஷதங்களைப் பூரணமாகப் படி. அறியாமையென்னும் குழியினின்றும் வெளியேறு. பிரமன் என்ற சூரிய ஒளியில் மூழ்கு. இந்த ஞானத்தைப் பிறருடன் பகிர்ந்து கொள். கல்வியில்லாமை, புனிதமற்ற விருப்பங்கள் இவற்றால் ஆட்டி வைக்கப்படுகிறாய். உருவ வேறுபாடு என்ற கனவினின்றும் விழித்துக்கொள். பெயர், புகழ் இவற்றிற்காகப் பாடுபடுவதை விட்டு விடு. மெய்ப் பொருளையே பற்றிநில். உன் ஆத்மாவை மட்டுமே நேசி. ஆத்மா அல்லது பிரம்மனே உண்மை ஆத்மாவாக விளங்குகிறது. ஆத்மாவில் வாழ். பிரம்மனாகுக. இதுவே உண்மை வாழ்க்கை.

கர்ம யோகப் பயிற்சி ஆத்ம ஞானத்தைப் பெற மனதைப் பக்குவப்படுத்துகிறது. வேதத்தைப் படிப்பதற்குத் தகுந்த அதிகாரியாக்குகிறது. அறியாதார் கர்ம யோகப் பயிற்சியின்றியே ஞானயோகப் பயிற்சியைத் தொடங்கு கிறார்கள். மாசு நீங்காமல் மனதில் தங்கிவிடுகின்றன. வேண்டாத விவாதங்கள், வீண் பேச்சுக்கள், முடிவற்ற வாதப் பிரதிவாதங்களில் இறங்குகிறார்கள். அதனால் தான் இந்த வேதாந்திகள் உண்மையை அறிவதில்லை. உண்மையாக அடையவேண்டியதென்னவெனில், வாழ்க்கை வேதாந்தம், ஆத்ம பாவத்துடன் தேசத்திற்கோ சமூகத்திற்கோ தன்னலமற்ற தொண்டாற்றுவதின் மூலமே அப்படிப்பட்ட உண்மை வேதாந்திகளாக மாற முடியும்.

அன்பெனும் விளக்கை உன் இதயத்தினுள் ஏற்று. எல்லோரிடமும் அன்பு காட்டு. உன் அன்பணைப்பில் சகல ஜீவராசிகளையும் சேர்த்துக்கொள். அனைத்தையும் தழுவிய விசுவப்பிரேமை (உலகப் பிரேமை) கொள். உன் செய்கை ஒவ்வொன்றிலும் தூய அன்பை வெளிப்படுத்து. தொடர்ந்து அன்புப் பணியாற்றுவதின் மூலம் தான் அமரத்துவமடைய முடியும். வெருப்பு, பொறாமை, கோபம் இவற்றை அன்பான இதயபூர்வமான பணியினால் அகற்றிவிடலாம். தயை, தரும சிந்தனை, இவைகள் இதயத்தைச் சுத்தப்படுத்துகின்றன. இதயத்தை இறைவனை நோக்கித் திருப்பி தெய்வீக ஒளியை ஏற்க அவனைச் சுத்தப்படுத்துகிறது.

உலகக் கடைமைகளைச் செய்து கொண்டு, பக்தி, சிரத்தையுடன் அவருடைய பெயர் பாடி, பரம சாந்தியையும், பேரானந்தத்தையும் அனுபவிப்பீர்களாக!

(வகுப்புக் கலைந்ததும், புதிதாக வந்தவர்கள் சுவாமிஜியைத் தொடர்ந்து அவருடைய அறைக்குள் போகிறார்கள்)

**சுவாமிஜி:** (சன்சாரியிடம்) குழந்தாய்! நீ உன்னுடன் மற்றும் சிலரை அழைத்து வந்திருப்பதாக தெரிகிறது. அனைவரும் தெய்வீக வாழ்க்கை என்ற என்னுடைய பிரசங்கத்தைக் கேட்டிருப்பீர்கள். அப்பிரசங்கம் எல்லா உபதேசங்களின் சாரமாகும். இதோ அப்பிரசங்க மடங்கிய துண்டுப் பிரசுரம்.

**மஞ்ஜீத் சிங் !** மஹாராஜ் என்னுடைய நண்பர் சன்சாரி நாதரிடமிருந்து தங்களுடைய புகழைக் கேள்விப்பட்டுத் தங்களைக் காண எண்ணி வந்துள்ளேன். புத்துணர்வூட்டும் தங்களுடைய சொற்பொழிவைக் கேட்டுப் பயனடைந்ததில் நான் பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன்.

**சுவாமிஜி:** எப்பொழுதும் உங்களனைவர்க்கும் தொண்டாற்றவே நானுள்ளேன். நீங்களனைவரும் இப்பிறப்பிலேயே மோட்சத்தை அடைய வேண்டும். இதுவே உங்களுடைய மேலான லட்சியமாக இருக்க வேண்டும். உன் மனைவி மேலான பக்த சிரோமணியாகத் தெரிகிறது. சங்கீர்த்தன காலத்தில் அவள் தன்னையே மறந்து விட்டதைக் கண்டேன். அப்படிப்பட்ட மனைவியை அடைந்த நீ பாக்கியசாலி. மனதை அடக்கி விட்டாய். புலன்களை வென்று விட்டாய். இனி கீதையையும் உபநிஷதங்களையும் படி. நீங்களிருவரும் ஆன்மீகப் பாதையில் முன்னேறுவீர்கள். பிறவியின் பயனை அடைவீர்களாக!

**சேவாராம்:** சுவாமிஜி! எனக்குத் தன்னலமற்ற சேவையில் விருப்பமதிகம். தங்களுடைய உபதேசத்தை விரும்புகிறேன்.

**சுவாமிஜி:** நீண்ட நாட்களாகத் தன்னலமற்ற சேவை செய்து உன் சித்தம் சுத்தியடைந்துவிட்டது. ஆனால் அங்கு பக்தியில்லை. கர்மயோகத்துடன் கூட ஞான யோகமாவது, பக்தியோகமாவது இருக்கவேண்டும். பக்தியே ஞானத்தினால்தான் முடிகிறது. பராபக்தியே ஞானமாகும். அவைகளில் ஏதாவதொன்றை எடுத்துக்கொண்டு, இரண்டையும் உன் தினசரி அலுவல்களில் சேர்த்துக்கொள். நீ சீக்கிரத்தில் முக்தியடைவாய்.

(ஹரிதாஸியிடம்) குழந்தாய்! உன்னிடம் நல்ல ஸம்ஸ்காரங்கள் உள்ளன. நீ சரியான பாதையில் சென்றுகொண்டிருக்கிறாய். உன் கணவனுக்கு நாராயண பாவத்துடன் பணிவிடை செய். ஸாவித்திரியின் அடிச்சுவடுகளைப் பின்பற்று. பொறுமை, அடக்கம், கற்பு இவையே உன்னுடைய உண்மைச் செல்வங்கள். அவைகளை நன்றாக கவனித்துக்கொள். ஆத்மீக வளர்ச்சியில் உன் கணவனுக்கு உதவி செய்.

*(அனைவரும் நமஸ்கரித்து விட்டு, சுவாமிஜியிடம் விடைபெற்றுச் செல்கிறார்கள்)*

## காட்சி – 8

*(ஹிந்து தர்மோத்தாரிணி சபைப் பந்தல்)*

(அரை குறை தூங்கி வழியும் 200 பேர்களடங்கிய கூட்டம். சளசளவென்று ஸ்திரீகள் பேசிக் கொண்டிருக் கிறார்கள். குழந்தைகள்சத்தம் செய்கின்றன. மஹா மஹோபாத்யாய பண்டிட் சந்திர சேகர் சாஸ்திரி 'ஹிந்துஸ்தானத்தின் பெருமை' என்ற பிரசங்கம் செய்கிறார்.)

**சாஸ்திரி:** சகோதர சகோதரிகளே ஹிந்து மதம் ஒரு தனிப்பட்ட மதிப்புடைய சமயம். எத்தனையோ அன்னியர்களின் எதிர்ப்புப் பிரசாரங்களையும், சூழ்ச்சிகளையும் எதிர்த்து சமாளித்து இத்தனை நூற்றாண் டுகளாக நிலைத்திருப்பது நமது ஹிந்து மதமேயாகும். அதன் காரணம் என்ன? கொஞ்ச காலத்திற்கொருதரம் நம்மிடையே சங்கரரைப் போன்ற எத்தனையோ பெரிய ஆசாரியார்கள் தோன்றியுள்ளனர். அவர்கள் தான் வேதச் செல்வத்தை அழியாமல் காப்பாற்றி வந்தனர். மதக் கோட்பாடுகளைச் சிதறவொட்டாமல் பாதுகாத்து வந்தனர். நமது மதம் எல்லா மதங்களையும் தழுவிய மதம். ஈடு இணையற்ற ஒரு சமூகம் நமது இந்து சமூகம். மனித வர்க்கத்தின் சரித்திரத்திலேயே இல்லாத ஒரு வகையான சமூக நிலை நம்மிடையே தானிருக்கிறது. அதனுடைய பெரிய கொள்கைகள் மறுபிறப்பு என்ற கர்ம நியதி. தெய்வத்திற்கும் மனிதனுக்குமுள்ள ஒரு சம்பந்தம், மனிதனை தேவனாக மாற்றக் கூடிய மாபெரும் அறிவுரைகள் முதலியன. எந்த அறிவாளியாலும்மறுக்க முடியாத இந்த உண்மைகளெல்லாம் ஹிந்து மதத்திலே பொதிந்து கிடக்கின்றன. இவையெல்லாம் நம் பழங்காலத்து ரிஷிகளாலும், மகான்களாலும் தீவிர சிந்தனை, தீவிர தவம் இவற்றினால் நிலைநாட்டப் பெற்றவை.

(சுந்தர் தாஸ், மாயாவதி, பெடூலால், தேசராஜ் நால்வரும் உள்ளே பிரவேசிக்கிறார்கள். சில நிமிஷ நேரம் ஒரு ஓரமாக நின்று அவருடைய பிரசங்கத்தைக் கேட்கிறார்கள். சாஸ்திரிஜி தொடர்ந்து பேசுகிறார்.)

இன்றைய விஞ்ஞானிகளும், அபேத வாதிகளும், உலகாயத மனம் படைத்தவர்களும் நாஸ்திகர்களும், சார்வர்களும் மதம், தெய்வம் ஆகியவற்றின் அவசியத்தை மறுக்கிறார்கள். அவர்கள் உண்மையில் இருளில் கண் தெரியாமல் தவிப்பவர்கள். இந்திரிய வாழ்க்கையைக் கண்டு தடுமாறி, வரப் போகும் வாழ்க்கையைப் பற்றி எண்ண முடியாதவர்கள். இறைவனின்றி ஒருவனும் இருக்க முடியாது. அவன் தான் எல்லாப் பிறப்புக்கும் ஆதி காரணம். எல்லா ஜீவன்களும் அவனிடமிருந்தே சைதன்ய சக்தி பெறுகின்றன.

*(சுந்தர் தாஸ் குறுக்கிடுகிறான்)*

நீர் சொல்லுவதெல்லாம் சுத்த மடத்தனம். உம்முடைய பேச்சில் உணர்ச்சி மட்டுமே இருக்கிறது. விஞ்ஞான பூர்வமான உண்மைகளை உம்முடைய பேச்சால் வெல்ல முடியாது. விவாதங்களுக்கு எதிரே உம்மால் அதை நிலை நாட்ட முடியாது.

**தேசராஜ்:** மதம் என்பது வேண்டாத ஒரு பந்தம். நீங்கள் தான் ஒரு தேசத்தின் குலைவுக்கும், ஏழ்மைக்கும் காரணம். எத்தனையோ ஆண்டுகளாக சமூகத்தை நீங்கள் கொள்ளை அடித்து வந்திருக்கிறீர்கள்.

**சாஸ்திரிஜி:** யாரும் என் பேச்சில் குறுக்கிடுவதை நான் விரும்பவில்லை. யாருக்காவது ஏதாவது சந்தேகமிருந்தால், கூட்டம் முடிந்த பின் என்னிடம் கேட்கலாம். என் பேச்சைக் கேட்க இஷ்டமில்லாதவர்கள் தயவு செய்து வெளியேறிவிடவும்.

**பெட்ரோலால்:** சரிதானய்யா, பண்டிட்ஜி! அபத்தமாகப் பேசாதேயும். தவறை மறைப்பதற்கு இது ஒரு வழியா? விவாதத்தில் தோற்று விடுவோமென்று உமக்குப் பயம். உமக்கு ஒன்றும் தெரியாது. ஏதோ அரைத் தூக்கத்திலாழ்ந்த இந்த ஜனங்களை ஓரிரண்டு காசுகளுக்காக ஏமாற்றுகிறீர்.

**மாயாவதி:** இது சரியான மடத்தனம். இதை நாங்கள் ஒரு பொழுதும் ஒப்புக்கொள்ளமாட்டோம். பண்டிட்ஜி எங்கள் கேள்விகளுக்குத் தகுந்த விடையளிக்கட்டும். அல்லது மேடையிலிருந்து கீழே இறங்கித் தன் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டும். சகோதரர்களே, வாருங்கள், இந்த மடையனை விரட்டுவோம்.

(மாயாவதி மேடையை நோக்கி முன்னேற, மற்றவர்கள் பின் தொடர்கிறார்கள். அவர்கள் சாஸ்திரியைக் கீழே தள்ள, ஒரு சண்டை ஏற்படுகிறது. சொற்பொழிவில் குறுக்கிட்ட மாயாவதி கோஷ்டியார் அடி உதை பட்டு வெளியேற்றப் படுகிறார்கள். இதைக்கவனித்திருந்த ஞானானந்தன், ஸேவாராம் இருவரும் அங்கு வருகின்றனர்)

**சேவாராம்:** நண்பர்களே! உங்களுக்கு ஏதாவது காயம் பட்டு விட்டதா? நான் என்னாலான உதவியைச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்.

**தேசராஜ்:** நண்பரே வந்தனம். எங்களுக்கு ஒன்றுமில்லை. ஆனால் மாயாவதியின் புதுப் புடவையை அம்முரடர்கள் கிழித்துவிட்டனர். செருப்புகள் கிழிந்துவிட்டன.

**ஞானானந்தன்:** சகோதரர்களே, நான் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். ஹிந்து மதத்தைப் பற்றி உங்களுடைய கொள்கை சரியானதாயிருக்கலாம். ஆனால் நீங்கள் கையாண்ட முறை அநாகரீகமானது. கூட்டம் முடிந்ததும்

உங்களுடைய கேள்விகளுக்கு விடையளிப்பதாக சாஸ்திரி சொன்னது சரிதான். நீங்கள் அதை ஒப்புக்கொண்டிருக்க வேண்டும். என்னுடன் நாளை வருவீர்களானால், எங்கள் குருநாதரிடம் சொல்லித் தங்கள் சந்தேகங்களைத் தீர்த்து வைக்கிறேன்.

**தேசுராஜ்:** சரி, நாங்கள் தயார் நாளை வந்து எங்களை உங்கள் குருநாதரிடம் அழைத்துச் செல்லுங்கள்.

*(ஞானானந்தன் வெளியேறுகிறான்)*

(பிறகு அனைவரும் தம் தம் இருப்பிடத்தை நோக்கிச் செல்கிறார்கள். வழியில் மாயாவதி மற்றவர் முன்னிலையில் அழுகிறாள். மற்ற பெண் பாலர்கள் தேற்றுகிறார்கள்)

**ஹரிதாஸி:** சகோதரி, நீ மேடையை நோக்கிச் சென்றது தவறு. ஆண்களுடன் சண்டையிடுவது நம் வேலையன்று.

மோஹினி: சகோதரி உனக்கு எப்படித் தான் அவ்வளவு தைரியம் வந்தது என்று நான் ஆச்சரியப்படுகிறேன். நாம் ஒரு பொழுதும் நம்முடைய அடக்கத்தைக் கைவிடக் கூடாது. பிற புருஷர்களைத் தீண்டவும் கூடாது.

**மாயாவதி:** சகோதரிகளே! என்னுடைய பிழையை அறிந்துகொண்டேன். வீட்டினுள் சௌக்கியமாக இருக்கும் நீங்கள் பாக்கியசாலிகள். வீடுதான் ஸ்திரீயின் இடம் என்பதை அறிந்து கொண்டேன். இனி ஒரு பொழுதும் அனாவசியமாக வெளி விஷயங்களில் தலையிடமாட்டேன்.

*(ஹரிதாஸி மீராவின் பக்தி ரஸமான பாடலொன்றைப் பாடுகிறாள். மற்றவர் பின் பற்றுகிறார்கள்.)*

## காட்சி – 9

*(சுவாமிஜியின் ஆசிரமம். சுவாமிஜி கீதா வகுப்பு நடத்துகிறார்)*

*தபஸ்விப்யோஸ்திகோ யோகீ ஜ்ஞானிப்ப்யோபுபி மதோதிக:*
*கர்மிப்பியச் - சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுனை*
*யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா*
*ச்ரத்தாவான் பஜதே யோமாம் ஸ மே யுக்த -தமோமத:*

*(அனைவரும் இந்த சுலோகங்களை சேர்ந்து ஒரே குரலில் சொல்லுகிறார்கள்.)*

**சுவாமிஜி:** (தன் சிஷ்யர்களில் ஒருவனிடம்) ராமதாஸ், இந்த சுலோகத்திற்கு விரிவுரை சொல் பார்க்கலாம்.

ராம்தாஸ்: (விவரிக்கிறான்) தவஞ் செய்வோரைக் காட்டிலும் யோகி சிறந்தோன். ஞானிகளிலும் அவன் சிறந்தவனாகக் காணப்படுகிறான். பலனை விரும்பும் கர்மிகளிலும் அவன் சிறந்தோன். மற்றெந்த யோகிகளிலும் எவன் அந்தராத்மாவில் இறைவனைப் புகுத்திப் போற்றுகிறானோ, அவன் மிக மேலான யோகி.

**சுவாமிஜி:** ஆத்மானந்தா, நீ விரிவுரை கூறு.

**ஆத்மானந்தன்:** எவனொருவன் ஆத்ம ஞானம் அடைந்து விட்டானோ அவனே யோகிகளுக்கெல்லாம் சிறந்தவன். வேதங்களை அறிந்தோரைக் காட்டிலும் அவனே சிறந்தோன். அவன் கர்ம யோகிகளிலும் சிறந்தோன். எவனுடைய ஆத்மா என்னிடத்தில் நிலை பெற்றருக்கிறதோ அவனே யோகிகளுக்கெல்லாம் சிறந்த யோகி.

**சுவாமிஜி:** யோகானந்தா, உன்னுடைய அபிப்பிராயத்தையும் சொல்.

**யோகானந்தன்:** எவன் யோகப் பயிற்சிகளின் மூலம் குண்டலினியை எழுப்புகிறானோ, அவனே யோகிகளி லெல்லாமம் சிறந்தவன். தபோதனர்களைக் காட்டிலும் மேலானவன், கர்மயோகிகளைக் காட்டிலும் சிறந்தோன். ஏனெனில் அவன் தான் இறைவனிடம் மட்டற்ற அன்பு கொண்டிருக்கிறான்.

**சன்சாரி:** சுவாமிஜி! இந்த சுலோகத்திற்கு எடுத்துச் சொல்லப்பட்ட இந்த விரிவுரைகளையெல்லாம் கேட்டதில் மிக்க மகிழ்ச்சி. இதைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயத்தையும் அறிய ஆவலாயிருக்கிறேன். மேலும் வேதாந்த உபதேசத்தைப் பற்றியும் சிறிது சொல்ல வேண்டும்.

**சுவாமிஜி :** செல்வச் சிரஞ்சீவிகாள், தவஞ் செய்வோரைக் காட்டிலும் யோகி சிறந்தவனாகக் கருதப்படுகிறான். சாஸ்திரங்களையெல்லாம் அறிந்த ஞானிகளிலும் அவனே சிறந்தோன். மனம், சொல், தேகம் இம் மூன்றினாலும் தவமியற்றுபவனே உண்மைத் தபஸ்வி. சாஸ்திரங்களை நன்கு உணர்ந்தவன் அதாவது பரோக்ஷஞானம் பெற்றவனே ஞானி. எவன் வேதங்களில் சொல்லியுள்ளபடி வேள்வி முதலியன செய்கிறானோ அவன் கர்ம யோகி. இவர் களனைவரையும் விட அந்த சுலோகத்தில் சொல்லியுள்ள யோகியே மேம்பட்டவன். ஏனெனில் அவன் நிர்விகல்ப சமாதியின் மூலம் ஆத்ம ஞானம் பெற்றிருக்கிறான். இதுவே மேலான நிலை. இந்த நிலையை அந்த யோகி அடைந்திருக்கிறான். எல்லா யோகங்களிலும், எவன் பக்தி சிரத்தையுடன் தன்னுடைய ஆத்மாவைப் பரமாத்மாவுடன் கலந்து, அவனையே வழிபடுகிறானோ, அவனே மேலானவன் என்று பகவான் அருளுகிறார்.

அன்பான குழந்தைகளே, உங்களிடம் எப்பொழுதும் சாந்தி நிலவுகிறதா? நீங்கள் மேம்பட்டவர்களாக இருக்கிறீர்களா? உங்களிடம் தன்னடக்கம் இருக்கிறதா? உங்களிடம் தெய்வீக சம்பத்துக்கள் இருக்கின்றனவா? அறியாமை உங்களை விட்டு அகன்றுவிட்டதா? நீங்கள் ஆத்ம ஞானம் அடைந்து விட்டீர்களா? தெய்வீக ஒளி உங்களை ஆட்கொண்டு விட்டதா? நீங்கள் நித்யமான அந்தத் தூய ஆத்மாவை உணர்ந்துவிட்டீர்களா? இதற்கெல்லாம் விடையளிக்க உங்களால் முடியுமா? கவனித்துக் கேளுங்கள் அமரத்துவமடைய வழி சொல்லுகிறேன். இதை ஒரு சிறிது பயின்றாலும் மரணம், துக்கம் இவற்றைக் கடந்து விடுவீர்கள்.

"நான் சச்சிதானந்த பிரம்மன். நான் குறைவற்ற பூரண ஒளியுடைய நித்யாத்மா. ஜாக்கிரத, ஸ்வப்னம், ஸுஷுப்தி அல்லது விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளையும் பார்த்துக்கொண்டிருக்கும் சாக்ஷி பூதம் நானே. உடல், மனம், பிராணன், புலன்கள் இவைகள் நானல்ல. நான் இந்தப் பஞ்ச இந்திரியங்களினின்றும், வேறுபட்டவன்" என்று எப்பொழுதும் நினை. நீ சீக்கிரமே ஆத்ம ஞானம் அடைவாய். நீ பிரம்ம ஞானம் பெறுவாய்.

உன் உடலை நீ தனி ஆத்மாவாக எடுத்துக் கொண்டால், மனைவி , மக்கள், செல்வம், உடல் இவற்றிடையே நீ கொள்ளும் பற்றும் உண்மையில் ஒரு பந்தமே. இந்த உலக வஸ்துக்களில் உள்ள பற்றுதலை நீக்கி விட்டு, நித்யமான ஆத்மாவுடன் ஐக்கியப் பட்டுவிட்டாயானால், அப்பொழுது நீ முக்தி, அல்லது விடுதலை அடைகிறாய். விருப் பமிருக்குமட்டும் உலகம் இருக்கிறது. விவேகம், வைராக்கியம் இவற்றைப் பயின்றும், பரமபுருஷனைத் தியானித்தும், விருப்பத்தைக் கடந்து செல். பேரின்பமனுபவி.

யானென்பதற்றான், எனதென்பதற்றான், இச்சையற்றான், அவனே சாந்தி நிலையடைகிறான். புலன்களை அடக்கு. நன்னெறியில் வாழ், இதய சுத்தி பெறு. உண்மையே பேசு. ஆத்மாவில் நிலைத்திரு. ஆனந்தமடை. இதை உணர்ந்ததும் நீ, கர்மா, விருப்பம், உலக வாழ்க்கை, அதன் துயரங்கள் இவற்றினின்றும் விடுபடுவாய்.

ஆத்மா, அல்லது பரமாத்மா அல்லது பிரம்மன் என்பது எது? சரதன், அழிவற்றான், அளவிடத் தகாதான், பிறப்பற்றான், அனவரதன், சாசுவதன், பிளத்தற்கரியவன், எங்கும் நிறைந்தவன், அசையாதவன், ஒளி வீசுவோன். அதுவே ஆத்மா, விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்று நிலைகளையும் பார்த்துக் கொண்டிருக்கும் சாக்ஷி அவனே. இவனை அறிந்தோன் அமர நிலை எய்துகிறான்.

அஞ்ஞானியே புலன் வேட்கையிலீடுபட்டு சுற்றி விரித்திருக்கும் வலையில் வீழ்கிறான். அவன் இருளின் நடுவே வசிக்கிறான். அவன் மறுபடியும், மறுபடியும் ஜனன மரணச் சக்கரத்தில் சுழலுகிறான். முக்தி பெறும் வழியை அவன் அறிவதில்லை. இந்திரிய சுகங்களால் அவன் ஏமாற்றப் படுகிறான். ஆனால் விவேகி, வைராக்கியமுடையவன் இந்தச் சிற்றின்பத்தை விரும்புவதில்லை. அவன் பரம் பொருளை தியானம் செய்து, அமரத்துவம் அடைகிறான்.

உனக்குச் சித்த சுத்தி இருக்குமேயானால், உன்னிடத்தில் ஏகாக்ர சித்தம் இருக்குமேயானால், உன் மனம் எந்த பாவத்தையும் (Bhava) கொள்ளும். கருணையைப் பற்றி நீ நினைத்தால், கருணா சாகரமாக மாறலாம். சாந்தியைப் பற்றி எண்ணினால், சாந்திக் கடலாக மாறுவாய்.

ஆத்மீகப் பாதையில் எவ்வளவோ இடையூறுகள் இருக்கின்றன என்பது உண்மை. அப்பாதையில் நடப்பது வாள் முனையில் நடப்பதற்கு ஒப்பாகும். பன்முறை நீ கீழே வழுக்கி விழலாம். ஆனால் உடனே எழுந்து நின்று முன்னிலும் பன்மடங்கு ஆர்வத்துடனும், திடத்துடனும், முகமலர்ச்சியுடனும் முன்னேற வேண்டும். மனோ உறுதியை இழக்கக் கூடாது. சீக்கிரமே நீ உன்னுள்ளிலிருந்தே ஆத்மீகப் பலம் பெறுவாய்,உன்னுள்ளிருப்போன் உனக்கு வழி காட்டுவான். எல்லா மகான்களும், தபஸ்விகளும், ஆச்சாரியர்களும், யோகிகளும் எத்தனையோ சோதனைகளையும், இடையூறுகளையும் வென்றே கடைசியில் மகான்களாக மாறினர்.

அருள் பெற்ற ரிஷிகளின் வழி பாபமற்றது. விடுதலைக்கு வழி இது தான். எக்காரியத்திலும் சித்த சுத்தி, நன்னடத்தை, தேவஜீவனம், தன்னடக்கம், எங்கும் நிறைந்த நித்யமான ஆத்மாவைப் பற்றிய தியானம் வேண்டும்.

நீ ஆத்ம ஞானம் பெற்று விட்டால், உன் சந்தேகங்களெல்லாம் ஓடி மறைந்து விடும். உன் இதயத்தில் எப்பொழுதும் பரம திருப்தி நிலைத்திருக்கும். ரஜோ, தமோ குணங்களினின்றும் விடுபடுவாய். எப்பொழுதும் சாந்தி, சந்தோஷம் இரண்டும் பெறுவாய். எனவே இப்பிறவியிலேயே கிடைத்தற்கரிய இம்மகோன்னத நிலையை அடைய முயற்சியுங்கள்.

எதை அறிந்தால் அனைத்தையும் அறியலாம்? எதை அறிந்தால் பற்று ஒழியும்? எதை அறிந்தால் மனிதன் அமரத்வம் பெறுகிறான்? அச்சத்தை வெல்கிறான். விருப்பத்தை ஒழிக்கிறான். பரம சாந்த நிலை பேரானந்தம் இவற்றில் திளைக்கிறான். அது தான் பிரம்மன் அல்லது

ஆத்மா அல்லது மெய்ப் பொருள். அது நிபந்தனையற்றது, மேலானது அதை அடைந்தால் தான் உண்மை ஆனந்தமடையலாம்.

இந்த உபதேசத்தை நீங்களெல்லாம் பின்பற்றி வாழ்வீர்களாக! ஆண்டவனின் அருளால் நான்கு வித உபாயங்களையும் (சாதன சதுஷ்டயம்) பெறுவீர்களாக! உள்ளிருக்கும் ஆத்மாவில் நிலைத்திருப்பீர்களாக! நீங்களெல்லோரும் இப்பிறவியிலேயே ஆத்ம ஞானமெய்துவீர்களாக.

(சுந்தர் தாஸ், தேசராஜ் பெட்டூலால், மாயாவதி முதலியவர்கள் பிரவேசம். சுவாமிஜி சிதானந்த கீதம் பாடுகிறார். அனைவரும் பின்னால் ஒரே குரலில் பாடுகிறார்கள்.

*(வகுப்பு கலைகிறது, ஞானானந்தன் புதிதாக வந்தவர்களை சுவாமிஜிக்கு அறிமுகப்படுத்துகிறான்).*

**ஞானானந்தன் :** சுவாமிஜி! இவர்கள் ஹரித்து வாரத்திலிருந்து வருகிறார்கள். ஹரித்துவார் கும்பமேளாவில் பண்டிட் சந்திரசேகர்ஜி பிரசங்கம் செய்து கொண்டிருக்கையில், அவருக்கும் இவர்களுக்கும் சிறிது சண்டை ஏற்பட்டது. இவர்கள் வேறு கொள்கைகள் கொண்டுள்ளவர்கள். தங்கள் உபதேசத்தின் மூலம் இவர்கள் கொண்டுள்ள தவறான கொள்கைகள் அகலட்டும் என்று இவர்களை இங்கு அழைத்து வந்தேன்.

**சுவாமிஜி :** பண்டிட்ஜி நல்ல அறிவாளியாயிற்றே. அவருடன் சண்டையிடுவதும், அவருடைய பிரசங்கத்தில் குறுக்கிடுவதும் சரியல்ல. உங்களுடைய சந்தேகங்களை என்னிடம் கூறினால் எனக்குத் தெரிந்த வரையில் அவற்றைத் தீர்க்க முயலுவேன்.

**சுந்தர் தாஸ் :** சுவாமிஜி மதம் என்பது வாழ்க்கையில் அவசிய மில்லையென்பது என்னுடைய அபிப்பிராயம்.

**மாயாவதி :** இன்றைய நவீன உலகில் அதனுடைய தேவை மறைந்துவிட்டது.

**தேசுராஜ் :** நன்னெறி பயிற்சியும், சமூகத் தொண்டும் மனிதன் உய்யப் போதுமானவை என்பது என் எண்ணம்.

**பெட்டுலோல் :** இதையெல்லாம் பற்றிக் கூட மனிதன் ஏன் கவலைப்பட வேண்டும்? வாழ்க்கையின் முழுப்பயனை அனுபவிப்போம். உலகிலுள்ள இன்பங்களை அனுபவித்து, உண்டு களித்திருப்போம்.

**சுவாமிஜி :** சரி, உங்கள் சந்தேகங்களைத் தெரிந்து கொண்டேன். நீங்களெல்லோரும் படித்தவர்கள். ஆனால் நீங்கள் மேல் நாட்டு நாகரீகத்தில் மூழ்கி விட்டீர்கள். அதனால் உங்களுடைய சொந்த நாட்டின் சரித்திரத்தையும் பெருமையையும் மறந்துவிட்டீர்கள். அதனால் தான் மதத்தின் அவசியத்தை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை.

உண்மையென்னவென்னில், தோன்றின நாள் முதல் மனிதன் இன்பத்தைத் தேடி அலைகிறான். இது மனித இயற்கை. ஏனெனில் எவருமே துக்கப்பட விரும்புவதில்லை. இந்த முயற்சியில் மனிதன் வெற்றி காணவில்லை என்பதைச் சரித்திரம் எடுத்துக்காட்டுகிறது. எல்லா உலக இன்பங்களும் நிலையற்றது, பொய்யானது என்பதை அவன் உணர்ந்தான். பேரின்பம், ஆத்ம ஞானம் அடைந்தால் மட்டுமே கிடைக்கிறது. நம்முடைய மாபெரும் ரிஷிகள் வசிஷ்டர், யாக்ஞவல்கியர், வியாசர், சுகர் அனைவரும் இந்த உண்மையை சாஸ்திரங்களில் வற்புறுத்தியிருக்கிறார்கள். இது நம்முடைய வாழ்க்கையிலும் மதத்தின் அவசியத்தை எடுத்துக் காட்டுகிறது.

தெய்வ பக்தியின்றி நன்னெறியும், சமூக சேவையும் மட்டிலும் இருந்தால் போதாது. மனிதன் உய்யும் வழி அங்கில்லை. ஒரு தலைப்பட்ட குளிர்ச்சியையே அது கொடுக்கிறது. தெய்வ விதியின்றி மனிதன் பூரணத்துவம் அடைய முடியாது. அப்பக்தியே ஞானத்தை அளிக்கிறது.

மனம், இதயம், கை மூன்றும் ஞானம் பக்தி, யோகங்களினால் ஒருங்கே வளர்ச்சியடைய வேண்டும். உலக வஸ்துக்களுக்குப் போலி மதிப்புக் கொடாதே. விவேகம், வைராக்கியத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். முக்திக்காக இறைவனிடம் இதய பூர்வமாகப் பிரார்த்தனை செய்யுங்கள். நீங்கள் விடுதலை பெறுவீர்கள்.

எல்லோருமாக: சுவாமிஜி, தாங்கள் சொல்வது சரியாகவே இருக்கிறது. இதை ஒப்புக் கொள்ளுகிறோம். இதற்காக நாங்கள் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

சுவாமிஜி: வாய் வார்த்தையால் ஒப்புக் கொள்வது மட்டும் போதாது. நீங்கள் ஏதாவது சாதனம் செய்ய வேண்டும். ஆறு மாதம் அப்படிச் செய்து வாருங்கள். நீங்கள் புது மனிதர்களாக மாறிவிடுவீர்கள். உங்களுடைய தினசரி வாழ்க்கையில் என்னுடைய உபதேசங்களைப் பின்பற்றுங்கள். நீங்களெல் லோரும் ஹரி நாமத்தை எட்டுத் திக்கிலும் பரவச் செய்யும் உண்மை பாகவதர்களாக மாறுவீர்களாக!

(அனைவரும் வணங்கி விட்டு ``சுவாமிஜிக்கு ஜே" என்று கோஷம் செய்கிறார்கள். கூடியுள்ளோர் அனைவரும் சந்தேகம் தீர்ந்தவர்களாய் மறுபடியும் சாஷ்டாங்கமாக குருவின் காலடியில் வீழ்ந்து வணங்குகிறார்கள். அவர்கள் அனைவரும் தேவ ஜீவனத்தை நடத்த ஆரம்பித்து விட்டனர். சுவாமிஜியின் அத்யந்த சிஷ்யர்களாகிவிட்டனர். உலக சமாதானத்திற்காக ஒரு பிரார்த்தனையுடன் கூட்டம் கலைகிறது).

ஓம் சத்குரு பரமாத்மனே நம:

இறைவா! உலக முற்றிலும் சாந்தி நிலவட்டும். சீக்கிரமே யுத்தம் முடியட்டும்! அகில தேசங்களும், எல்லா வகுப்பினரும் தூய அன்பினால் பிணைக்கப்படட்டும். அனைவரும் சாந்தி, செழுமையை அனுபவிக்கட்டும். உலகமுற்றிலும் சாசுவதமான சாந்தி நிலவட்டும். உலக நலத்தின் பொருட்டுத் தியாக உணர்ச்சியுடன் நாங்களெல்லோரும் ஒற்றுமையுடன் உழைப்போமாக. உலக சகோதரத்துவம், விசுவப் பிரேமை இவற்றைக் கடைப் பிடிப்போமாக! எல்லா முகங்களிலும் உன்னையே காண்போமாக.

கருணா நிதியே! ஒருவரையொருவர் அறிந்து கொள்ள சக்தியளி. பொருத்தருளும் இதயம், சகிப்புத் தன்மை பெருந் தன்மை, அனுசரணை இவற்றை அளி.

ஆண்டவனே, எங்களுடைய ஞானக் கண்ணைத் திறந்து எங்கும் ஆத்மாவைக் காண அருள்புரி.

கீழ் திசையில் சாந்தி நிலவட்டும். மேல் திசையில் சாந்தி நிலவட்டும். வடதிசையில் சாந்தி நிலவட்டும். தென் திசையில் சாந்தி நிலவட்டும். மேலும், கீழும் சாந்தி நிலவட்டும். உலகில் எல்லா ஜீவராசிகளிடையும் சாந்தி நிலவட்டும்.

அது நிறைவு பெற்றிருக்கிறது. இது நிறைவு பெற்றிருக்கிறது. அதிலிருந்து அது நிறைவு பெற்றிருக்கிறது. அந்நிறைவினின்றும் இந்நிறைவு நீக்கப்பட்ட போதிலும், அது நிறைவு பெற்றே இருக்கிறது.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

